# கல்கி

## பொருளடக்கம்


மலர் 6 } இதழ் 26 }

1947 ஜனவரி 26

{ விய ஷு { தை 13






உலகத்தில் எத்தனையோ வீர புருஷர்களைக் காணலாம்; அறிவாளிகளையும் படிப்பாளிகளையும் காணலாம்; தேசபக்தி வேதியில் தியாகம் செய்பவர்களைக் காணலாம்; திறமைசாலிகளையும் இராஜ தந்திரிகளையும் பார்க்கலாம். ஆனால் 'நல்ல மனிதர்'களைப் பார்ப்பது மட்டும் கொஞ்சம் கஷ்டமான காரியம்.

அத்தகைய நல்ல மனிதர் ஒருவர் நமது இந்த இதழின் அட்டையில் விளங்குகிறார். அவர் ராம்சால் கம்பெனி சொந்தக்காரரும் இந்த வருஷத்தில் சென்னை ஷெரீப் பதவிக்கு வந்திருப்பவருமான ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு அவர்கள்.

*




*

விளம்பரத்தையும் அதனால் விளையக்கூடிய பலன்களையும் எதிர்பாராமல் ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு எத்தனையோ நல்ல காரியங்களைச் செய்து வந்திருக்கிறார். தமிழ்ப்பற்று மிகுதியும் உடைய ஸ்ரீ நாயுடுகாரு, மகாமகோபாத்தியாய டாக்டர் சாமிநாதய்யர் அவர்களின் சாக்ஷாத் உருவச் சிலை ஒன்றைச் செய்வித்து நிலைநாட்டும் முயற்சியைத் தொடங்கி, பிறருடைய உதவி அதிகம் இல்லாமலே ஏறக்குறையச் செய்து முடித்திருக்கிறார். திருவல்லிக்கேணி பெண்கள் பள்ளிக்கூடம், கோடம்பாக்கம் ஹரிஜன் பள்ளிக்கூடம் முதலிய சொந்த ஸ்தாபனங்களுக்குப் பெரும் உதவி செய்திருக்கிறார். தியாகராஜநகரில் நிர்மாணிக்கப்பட்டுச் சமீபத்தில் கும்பாபிஷேகம் நடந்த சிவ—விஷ்ணு சமரச ஆலயக் கமிட்டியின் அக்கிராசனராயிருந்து தெய்வத் திருப்பணி இயற்றியிருக்கிறார். இன்னும் தேச முன்னேற்றத்துக்கான எந்த நல்ல கைங்கரியம் ஆனாலும், ஸ்ரீ ராமசாமி நாயுடுவின் பங்கு அதில் சேராமல் இருப்பது அபூர்வம் என்று சொல்லலாம். இதெல்லாம் ஒருபுறமிருக்க, ஸ்ரீ ராமசாமி நாயுடு அவர்களுடன் பழகியவர்கள் யாராயிருந்தாலும், அவருடைய நல்ல குணத்தை உடனே உணர்ந்து பாராட்டாமலிருக்க முடியாது.

அத்தகைய நல்ல மனிதருக்கு இந்த வருஷம் சென்னை மாநகரின் ஷெரீப் பதவி கிடைத்திருக்கிறது. ஹைகோர்ட்டில் செஷன்ஸ் விசாரணை ஆரம்பமாகும்போது, ஹைகோர்ட் ஜட்ஜுகளுக்கு முன்னால் வெள்ளித் தடியைப் பிடித்துக்கொண்டு போய், ஜட்ஜை அவருடைய நியாய பீடத்தில் அமர்த்தி, தாமும் பக்கத்து ஆசனத்தில் அமர்ந்து, நியாய பரிபாலனத்தைச் சரிவர நடத்தி வைப்பது ஷெரீப் பதவியின் கடமைகளில் முக்கியமானதாகும்.

இதற்கு முன்னெல்லாம் சாதாரணமாக அதிகார வர்க்க தாஸர்களுக்குத்தான் மேற்படி கௌரவப் பதவியைக் கொடுப்பது வழக்கமாம். இவ்வருஷம் நல்ல மனுஷரும் பரோபகாரியுமான ஸ்ரீ ராமசாமி நாயுடுவுக்கு மேற்படி பதவி கிடைத்திருக்கிறது. சென்னைக் காங்கிரஸ் சர்க்கார் செய்திருக்கும் சில நல்ல காரியங்களில் இதுவும் ஒன்று எனச் சொல்லலாம்.




மலர் 6 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 25

# என்ன சேதி?

## கணக்குப் பார்க்க வேண்டாம்!

சமீபத்தில் சென்னை கவர்னர் சர் ஆர்ச்பால்ட் நை தற்போது மதுவிலக்கு அமுலிலிருந்து வரும் அனந்தப்பூர் ஜில்லாவிலுள்ள சிங்கனமாலா கிராமத்துக்குப் போயிருந்தபோது, அந்த ஊர் தலையாரியை அழைத்து, "மதுவிலக்கு அமுலுக்கு வந்த பிறகு இந்தக் கிராமவாசிகளுடைய நிலைமை எப்படி இருக்கிறது?" என்று கேட்டாராம். அதற்கு மேற்படி தலையாரி, "ஓ, ரொம்ப நன்றாயிருக்கிறது! இப்போதெல்லாம் அவர்கள் இரண்டு வேளையும் திருப்தியாகச் சாப்பிடுகிறார்கள்" என்று பதில் சொன்னாராம்.

அனந்தப்பூர் ஜில்லாவில் மாத்திரம் அல்ல, மதுவிலக்கு அமுலுக்கு வந்துள்ள எட்டு ஜில்லாக்களிலும் ஏழை மக்களின் வாழ்க்கை ரொம்பவும் சந்தோஷமாகவும் சுபிட்சமாகவும் மாறியிருக்கிறது என்பதில் சந்தேகமில்லை. அத்துடன் மட்டுமல்ல; மேற்படி ஜில்லாக்களிலுள்ள ஏழை கிராமவாசிகள் தங்கள் சொற்ப வருமானத்தில் கொஞ்சம் பணத்தை மீதம் பிடித்துச் சேமித்து வைக்கவும் ஆரம்பித்திருக்கிறார்கள். ஏழை மக்களுக்குப் புது வாழ்வு அளிக்கவும் அவர்கள் வயிறார இரண்டு வேளை சாப்பிடுவதற்கும் மதுவிலக்குத் திட்டம் எவ்வளவு அவசியம் என்பதைச் சொல்லத் தேவையில்லை. காங்கிரஸ் மந்திரிகளுக்கு இதை எடுத்துரைக்க வேண்டிய அவசியமுமில்லை. ஆனால் நமது மந்திரிகள் காங்கிரஸ் சட்டசபைக் கட்சி அங்கத்தினர்களைக் கூட்டி ஆலோசனை கேட்டிருக்கிறார்கள். இதற்குச் சட்டசபைக் கட்சி அங்கத்தினர்களில் பெரும்பாலோர், புது வருஷத்திலே மாகாண முழுவதும் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டுவர வேண்டியதுதான் என்று கூறியிருக்கிறார்கள். ஆனால், நம்முடைய வருமான மந்திரி காக்தேர, மாகாண முழுவதும் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வருவது சாத்தியமல்லவென்றும் போனால் போகட்டுமென்று இன்னும் நாலு ஜில்லாக்களில் வேண்டுமானால் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வரலாமென்றும் கூறியிருக்கிறார். இதற்குச் சென்னை சட்டசபை அங்கத்தினர்கள் யோசனை சொல்லவேண்டிய அவசியமோ, பிறகு அதைப் பிரதம மந்திரி பிரகாசம் புனராலோசனை செய்யவேண்டிய அவசியமோ ஏதுவும் இல்லை. நான்கு ஜில்லா எட்டு ஜில்லா என்று கணக்குப் பார்க்காமல் உடனே மாகாண முழுதும் மதுவிலக்கை அமுலுக்குக் கொண்டு வர வேண்டியதுதான் சென்னை சர்க்காருடைய முதல் கடமையாகும்.

## ஐந்து வருஷத் திட்டம்

சென்ற வருஷம் எப்படியோ ஒருவகையாக உணவுப் பஞ்சத்திலிருந்து தப்பிப் பிழைத்தோம். சென்னை மந்திரிகள் மேற்படி பஞ்சத்தைச் சமாளிப்பதற்காக முன்னுக்குப் பின் முரணான எத்தனையோ உத்தரவுகளைப் போட்டுக் கொண்டும், சரியான காரியங்களைச் சரியான சமயத்தில் செய்யாமலுமிருந்தார்கள். ஆனால், நல்லவேளையாக இடைக்கால தேசீய சர்க்கார் ஏற்பட்டு, டாக்டர் ராஜேந்திர பிரசாத் உணவு மந்திரியாகவும் ஆனார். ராஜன் பாபுவின் ஒத்துழைப்பினாலும் தீவிரமான நடவடிக்கைகளினாலும் ஒருவகையாகப் பஞ்சக் கொடுமையிலிருந்து மீண்டோம்.

சென்ற வருஷம் நாம் பஞ்சத்திலிருந்து தப்பிப் பிழைப்பதற்குப் பேருதவி புரிந்த ராஜன் பாபு இனிமேல் எப்போதுமே நாட்டில் பஞ்சம் வராமல் இருப்பதற்காக ஐந்து வருஷத் திட்டம் ஒன்றை வகுத்திருக்கிறார். இந்தியாவுக்கு வேண்டிய உணவுப் பொருள்கள் எல்லாம் இங்கேயே உற்பத்தி செய்யப்படுவதுதான் இந்தத் திட்டத்தின் நோக்கம். கங்கையும் காவேரியும் பாயும் இந்தியா தேசம் உணவுப் பொருள்களுக்குப் பிற நாடுகளை எதிர்பார்ப்பதும், தானியத்துக்காகப் பல கோடி ரூபாய் வெளி நாடுகளுக்கு அனுப்புவதும் மிகவும் அவமானமான காரியங்கள். இந்த நிலைமையை மாற்றி உணவுப் பொருள் உற்பத்தியை அதிகமாக்குவதற்காகத்தான் ராஜன் பாபு திட்டம் போட்டிருக்கிறார். இதற்காகப் பல கோடி ரூபாய் மத்திய சர்க்கார் செலவழிக்கப் போவதாகவும் சொல்லுகிறார். விவசாயப் பொருள்களின் விலையை நிர்ணயித்து அதை அமுலுக்குக் கொண்டு வருவதற்காக மூன்று கமிட்டிகள் நியமிக்கப்படும் என்பதாகவும் சொல்லியிருக்கிறார். இது விவசாயிகளுக்கு மிக்க உதவியாகவும் உற்சாக மளிக்கத் தக்கதாகவும் இருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை. இந்தத் திட்டம் வெற்றியடைவதற்கு எல்லா மாகாணங்களும் ஒத்துழைக்க வேண்டுமென்று டில்லியில் கூடிய உணவு உற்பத்தி மகாநாட்டில் ராஜன் பாபு கேட்டுக் கொண்டார். அவருடைய வேண்டுகோள் சென்னை மாகாண சர்க்காரின் செவியிலும் விழுந்திருக்கும் என்று நம்புகிறோம்.

### கலகத்துக்குக் காரணம்

**வை**ஸ் அட்மிரல் காட்பிரே, ஜமாதார் சிங் என்ற பெயர்களை நேயர்கள் மறந்திருக்க மாட்டார்கள் என்று நம்புகிறோம். மறந்திருந்தாலும் மறுபடியும் ஞாபகப்படுத்திக் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறோம்.

சென்ற வருஷம் பம்பாயிலே நடந்த இந்தியக் கடற்படைக் கலகத்தின்போது இந்த இரண்டு வெள்ளைக்காரர்களும் ஒரே ஆர்ப்பாட்டம் செய்து மேற்படி கலகத்தை அடக்கியதும் மேற்படி கலகத்தின் விளைவாக லட்சக்கணக்கான சொத்துக்களுக்குச் சேதம் ஏற்பட்டதும் ஞாபகம் இருக்கலாம். இந்தக் கலகத்தை விசாரிப்பதற்காக அப்போது அதிகாரத்தி லிருந்த அதிகார வர்க்க சர்க்கார் ஒரு விசாரணைக் கமிஷனை நியமித்திருந்தார்கள். அந்த விசாரணைக் கமிஷன் சென்ற ஒரு வருஷ காலமாக மேற்படி கலகம் சம்பந்தமான எல்லா விஷயங்களையும் நன்கு ஆராய்ந்து கலகத்துக்குக் காரணம் என்னவென்பதைத் தெளிவாகச் சொல்லி யிருக்கிறது.

சாப்பாடு, சம்பளம், பிரமோஷன் முதலிய விஷயங்களில் இந்தியக் கடற்படை உத்தியோகஸ்தர்களுடைய நியாயமான குறைகளைக் கவனிக்காமல் அவர்கள் அதிருப்தியும் ஆத்திரமும் அடையத்தக்க முறையில் வெள்ளைக்கார மேலதிகாரிகள் நடந்து கொண்டதாலேயே கலகம் நிகழ்ந்ததென்று மேற்படி விசாரணைக் கமிஷனில் உள்ளவர்கள் அனைவரும் ஏகமனதாகத் தீர்ப்புச் சொல்லி யிருக்கிறார்கள்.

நம்முடைய இடைக்கால தேசிய சர்க்கார் மேற்படி தீர்ப்பை ஒப்புக்கொண்டு இந்தியக் கடற்படை உத்தியோகஸ்தர்களின் குறைகளை யெல்லாம் விரைவில் தீர்ப்பதாகவும் அதற்குப் பதிலாக அவர்கள் நாட்டின் பெருமைக்கும் தேவைக்கும் ஏற்ற முறையில் நடந்துகொள்ள வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

இந்தியக் கடற்படை உத்தியோகஸ்தர்கள் அவ்விதமே நடந்து கொள்வார்களென்றும் இன்னும் கொஞ்ச காலத்துக்குள்ளாக ஏழு கடல்களிலும் அவர்கள் இந்திய சுதந்திரக் கப்பற்படையை நடத்திச் செல்லுவார்களென்றும் எதிர்பார்க்கிறோம்.

### உண்ணாவிரதம் நின்றது

**கா**ந்திஜியின் அன்புக்குப் பாத்திரமான ஸ்ரீமதி அம்துஸ் ஸலாம் என்ற முஸ்லிம் மாது வங்காளத்திலே ஸிரோந்தி என்ற இடத்திலே இந்து முஸ்லிம் ஒற்றுமைக்காகச் சென்ற இருபத்தைந்து நாட்களாகக் கடுமையான உண்ணாவிரதம் இருந்து வந்தார். அவருடைய தேக நிலைமை மிகவும் மோசமாக இருப்பதாகச் செய்தி வந்து தேசமக்கள் மிகவும் கவலைப் பட்டார்கள். நல்லவேளையாக, அந்த உண்ணா விரதம் விரைவில் வெற்றிகரமாக முடிந்திருக்கிறது.

கிழக்கு வங்காளத்திலே தம்முடைய புனிதமான சமாதானத் திக்கு விஜயத்தை நடத்திக் கொண்டு வரும் காந்தி மகான், அந்தக் கிராமத்துக்குப் போனபோது, அங்கே ஒரு அற்புதமான காரியம் செய்திருக்கிறார். அங்கு பெரும்பான்மையாக வாழும் முஸ்லிம்கள் காந்திஜியைச் சந்

ஜித்து, இனிமேல் அங்கே ஹிந்து-முஸ்லிம் கலகம் வாராதபடி பார்த்துக் கொள்வதாகவும் ஹிந்துக்கள் தங்கள் இஷ்டம்போல் தெய்வங்களைத் தொழுவதற்குத் தாங்கள் எல்லா உரிமைகளையும் அளிப்பதாகவும் வாக்குறுதி அளித்திருக்கிறார்கள். வெறும் வாய் மூலம் அல்ல, எழுத்திலேயே எழுதிக் கையொப்பமும் போட்டுக் கொடுத்திருக்கிறார்கள்.

இவ்விதம் அங்கு ஹிந்து-முஸ்லிம் ஒற்றுமை ஏற்பட்டு விட்டதால் ஸ்ரீமதி லலாம் தம்முடைய உண்ணாவிரதத்தை நிறுத்திக் கொண்டு விட்டதாக தேச மக்களுக்குச் சந்தோஷச் செய்தியை விடுத்திருக்கிறார்.

## சைகால் மறைந்தார்

ஹிந்தி இசையுலகத்துக்குச் சக்கரவர்த்தியாக விளங்கிய ஸ்ரீ சைகால் காலமானதை யறிந்து மிகவும் வருந்துகிறோம். ஸ்ரீ சைகால் புகழ் பெற்ற சங்கீத வித்வான் என்பது மாத்திரமல்லாமல் சிறந்த நடிகருமாவார். இந்தியாவில் டாக்கிப் படங்கள் ஆரம்பமான புதிதிலேயே வெகு இயற்கையாகவும் திறமையாகவும் நடித்துப் புகழ்பெற்ற ஒரு சிலருள் ஸ்ரீ சைகாலும் ஒருவர். அவர் நடித்த டாக்கீ மன்சூர், சண்டிதாஸ், தெருப் பாடகன், முதலிய படங்கள் ரசிகர்களுடைய மனதை விட்டு என்றென்றும் அகலாது. ஹிந்தி தெரியாத தமிழ் மக்களையும் ஆகர்ஷித்து ஹிந்துஸ்தானி சங்கீதத்தில் பாமரர்களுக்கும் மோகம் உண்டாகும்படியாகச் செய்த பெருமை அவருடைய கர்ணாமிருதமான குரல் ஒன்றுக்கே உரியதாகும்.

ஸ்ரீ சைகாலின் மரணம், இந்திய சினிமா உலகத்துக்கும் சங்கீத உலகத்துக்கும் ஒரு பெரிய நஷ்டமாகும்.

---

# நூற்றாண்டு வைபவம்



ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமிகளின் நூற்றாண்டு சமாதி தினத்தைச் சென்ற 20-1-47 அன்று சென்னை மயிலை சங்கீத சபையார் ஸ்ரீ கே. வி. கிருஷ்ணசாமி ஐயரின் தலைமையில் வெகு விமரிசையாகக் கொண்டாடினார்கள். மேற்படி வைபவத்தில் ராம்லால் கம்பெனி ராமசாமி நாயுடு, வெங்கடேசுவரன் ஜி. வி. என். முதலிய பிரமுகர்கள் கலந்து கொண்டார்கள். அன்றையதினம் ஸ்ரீ தியாகராஜரின் திரு உருவப் படத்தைப் புஷ்பப் பல்லக்கில் வைத்து அலங்கரித்துக் கபாலி மாட வீதிகளில் ஊர்வலம் வந்தார்கள்.




ஹிட்லருடைய முறையைக் கையாண்டு இந்தோ சைனாவை நசுக்கப் பார்க்கும் பிரான்ஸுக்கு ஹிட்லரின் ஆவி வாழ்த்துக் கூறுகிறது.

# அதிசயமும் ஆனந்தமும்!

"1947-ம் ஆண்டு ஜனவரி மாதம் டில்லிமா நகரில் என்றுமிராத ஓர் அதிசயச் சம்பவம் நிகழ்ந்தது!''

இவ்வாறு எதிர்கால இந்தியச் சரித்திராசிரியர்கள் தங்களுடைய வர்ணனையை ஆரம்பிக்கப் போகிறார்களென்பது நிச்சயம்.

புது டில்லியில் அரசியல் நிர்ணய சபைக் கூட்டம் மீண்டும் குறித்த காலத்தில் நடந்திருப்பதைப் பற்றி ஆச்சரியப் படுவதற்கில்லை. அச்சபையின் லீகர்கள் வீற்றிருக்க வேண்டிய ஸ்தானங்கள் மீண்டும் காலியாகக் கிடந்ததிலும் அதிசயம் எதுவுமில்லை. பூரண சுதந்திர இந்தியக் குடியரசே இந்தியாவின் லட்சியமென்பதை உலகறியப் பிரகடனம் செய்யும் பண்டித ஜவாஹர்லால் நேருவின் தீர்மானம் அரசியல் நிர்ணய சபையில் அமோக ஆதரவுடன் ஏகமனதாக நிறைவேறியதும் அதிசயமான விஷயமல்ல.

பின்னர் வேறு என்ன அதிசயம் நேர்ந்து விட்டது?

நாற்பது கோடி இந்திய மக்களின் உத்தாரணத்துக்கான, — மற்றும் கோடானு கோடிக் கணக்கான சந்ததிகளின் உத்தாரணத்துக்கான ஜவாஹர்லால்ஜியின் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறியிருப்பது கண்டு மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறோம். அதனால் ஏற்பட்டுள்ள ஆனந்தத்தில்,—சுதந்திரோதயத்தினால் ஏற்பட்டுள்ள பிரகாசத்தில், — தீர்மானம் நிறைவேறு முன்பாக பண்டித நேரு ஆட்சேபவாதிகளுக்கெல்லாம் அளித்த ஆணித்தரமான பதிலால் ஏற்பட்டுள்ள உணர்ச்சிப் பெருக்கில், மேற்படி அதிசயத்தின் முக்கியத்துவம் எங்கு குறைந்து விடுமோ என்பதே நமது கவலையாகும்.

அதாவது, மிதவாதிகளின் திலகமான ஸ்ரீமான் ஜெயக்கர் தமது முட்டுக்கட்டைத் திருத்தத்தை வாபஸ் பெற்று, பண்டித ஜவாஹர்லால் நேருவின் தீர்மானம் ஏகமனதாக நிறைவேறுவதற்கு உதவி புரிந்து விட்டார்!

மிதவாத சிகாமணிகளின் சரித்திரத்திலேயே இது ஒரு புதுமையான நிகழ்ச்சியல்லவா? அவர்களில் சிலர் மகா மேதாவிகள்; தர்க்க வாதத்தில் நிபுணர்கள்; உணர்ச்சிப் பெருக்கோ, உத்வேகமோ எதுவுமின்றி எவ் விஷயத்தையும், தொன்னைக்கு நெய் ஆதாரமா, அல்லது நெய்க்குத் தொன்னை ஆதாரமா என்று ஆராய்ச்சி செய்யும் சுபாவமுடையவர்கள்.

கடவுள், மகாராஜாக்களைச் சிருஷ்டித்து அவர்கள் ஆட்சி புரிவதற்காக ஜனங்களைச் சிருஷ்டித்திருப்பதாக ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் கோஷ்டியார் கூறி வருகின்றனரல்லவா? அது போலவே கடவுள் பிரிட்டிஷாரைச் சிருஷ்டித்து அவர்கள் ஆட்சி புரிவதற்காக இந்தியர்களைச் சிருஷ்டித்ததாகச் சில விசித்திர மிதவாதிகள் கூறிய காலம் உண்டு!

பாரத தேச மெங்கும் பொங்கி வரும் சுதந்திர வெறி காரணமாக அவர்கள் தங்களுடைய போக்கை இன்று ஓரளவு மாற்றிக் கொண்டுள்ள போதிலும், அவர்களுடைய தேசாபிமானம், தீவிரம் அல்லது தியாகம் என்ற கட்டத்துக்கு வரும் போது ஸ்தம்பித்து நின்று விடுவது வழக்கம். அவர்களின் தேசாபிமானம் சிற்சில சமயங்களின் அவர்களுடைய மிதவாத உணர்ச்சியை அமுக்கி விட்டு மேலே எழுந்தாலும், கடைசியாக முடிவு பிரிட்டிஷார் 'சபாஷ்' என்று சொல்லக்கூடிய விதத்தில் அபஸ்வரமாகவே இருக்கும்! அரசியல் நிர்ணய சபையிலும் ஸ்ரீமான் ஜெயக்கர் அந்த சம்பிரதாயத்தை அனுஷ்டிக்கப் போவதாகப் பயமுறுத்தினார்! ஆனால் அவரது அபஸ்வரத்தைக் கேட்க மேற்படி சபையில் யாரும் தயாராக இல்லை. எனவே, ஜெயக்கர் தம்முடைய முட்டுக்கட்டைத் திருத்தத்தை வாபஸ் பெற்றுக் கொண்டு, கண்ணியமாகத் தமது இடத்தில் போய் உட்கார்ந்து விட்டார்.

தீர்மானமும், சபையினரின் கரகோஷமும் ஆனந்த ஆரவாரமும்

னானாவ ஏகமனதாக நிறைவேற்றியது. இவ்வாறாக சுப சூசகத்துடன் சுதந்திரோதயமாகியிருக்கிறது!

வாதத்துக்கு மருந்துண்டு, பிடிவாதத்துக்கு மருந்தில்லை. முஸ்லிம் லீக்கின் ஆட்சேபனை நியாயமானதாயின், அரசியல் நிர்ணய சபையின் இந்தக் கூட்டத்துக்கு லீக் தலைவர்கள் வந்திருக்க வேண்டும். ஆனால் அவர்களுடைய ஆட்சேபனை பிடிவாதத்தையும் முட்டுக்கட்டை வாதத்தையும் ஆதாரமாகக் கொண்டதென்பது இப்போது உலகமறிய நிரூபிக்கப்பட்டிருக்கிறது.

கோஷ்டிப் பிரிவினை சம்பந்தமாக பிரிட்டிஷ் அரசாங்கம் கடைசியாக விடுத்த வியாக்கியானம் பெருந் துரோகமாகுமென்பது பொதுஜன அபிப்பிராயம். அப்படியிருந்தும்கூட லீக் தலைவர்களைத் திருப்தி செய்வதற்காக, எவ்வளவு அதிகமாக விட்டுக்கொடுக்க முடியுமோ அவ்வளவு தூரம் விட்டுக் கொடுத்து எப்படியாவது ஐக்கிய பாவத்தை ஸ்தாபிப்பதற்காகக் காங்கிரஸ், அக்கிரமமான அந்த வியாக்கியானத்தையும் ஒப்புக் கொண்டது.

அதைக் காங்கிரஸ் ஒப்புக்கொண்டாலொழிய, முஸ்லிம் லீக் அரசியல் நிர்ணய சபையில் கலந்து கொள்ள முடியாது என்று ஜனாப் ஜின்னா கூறினார். அந்த வியாக்கியானத்தைக் காங்கிரஸ் அங்கீகரிக்காதென்று பிரிட்டிஷ் சர்க்காரும் ஜின்னா கோஷ்டியினரும் எண்ணியிருந்தனர். ஆனால் எதிர்பாராத விதமாக நமது மாபெருந் தலைவர்கள் அதை ஒப்புக் கொண்டு விடவே, மேற்படி இரு கோஷ்டியினரும் திக்பிரமையடைந்து மேற்கொண்டு எத்தகைய முட்டுக் கட்டை வாதத்தைக் கிளப்பலாமென யோசித்துக் கொண்டிருக்கின்றனர் போலும்!

ஆனால், அத்தகைய முட்டுக் கட்டை வாதிகளுக்கு ஜவாஹர்லால்ஜி இறுதி எச்சரிக்கை விடுத்திருக்கிறார்:

"சபைக்கு வர வேண்டியவர்கள் வந்திருக்கலாம். அவர்கள் வருவதற்கு வேண்டிய அவகாசம் அளித்தாகி விட்டது. ஆனால் அவர்கள் இன்னும் தயங்கித் தடுமாறி வருகிறார்கள். எப்போது வந்தாலும் நாங்கள் அவர்களை வரவேற்கத் தயாராக இருக்கிறோம். எனினும் ஒரு விஷயத்தை மட்டும் சகலரும் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். அதாவது யாரோ வருகிறார் அல்லது வரவில்லையென்பதற்காக நமது அலுவல்கள் நின்று விடப் போவதில்லை. நாம் காத்துக் காத்து அலுத்து விட்டோம். ஆறு வாரங்களல்ல; எத்தனையோ ஆண்டுகள் காத்திருந்தோம்; எத்தனையோ தலைமுறைகள் காத்திருந்தோம். இன்னும் எத்தனை யுகங்கள் காத்திருப்பது? பணக்காரர்கள் காத்திருக்கலாம்; பசிப் பிணியால் வாடும் பரம ஏழைகள் காத்திருக்க முடியாது!" என்று பண்டித நேரு வீர கர்ஜனை புரிந்திருப்பது அஷ்ட திசைகளையும் அதிரச் செய்யும்.

* * *

மக்களின் மனித உரிமைகளை மறுக்க மண்டலாதிபதிகளின் மகுடங்கள் என்ன கதிக்குள்ளாயின? இதை யொட்டிச் சரித்திரம் கூறும் உண்மைகள் பயங்கரமானவை. மக்களை ஆட்சி புரிய மன்னனுக்கு தெய்விக உரிமை யிருக்கிறதென்ற 'தத்துவம்' புதை யுண்டு எவ்வளவோ காலமாகி விட்டது. அப்படியிருந்தும் இன்று இந்தியாவில் சில பிரமுகர்கள் மீண்டும் அதைத் தோண்டியெடுத்து உயிர் கொடுக்க முற்படுவதைக் காட்டிலும் கேலிக் கூத்து வேறெதுவும் இருக்க முடியாதென்று ஜவாஹர் கூறியிருக்கிறார். அத்துடன் அவ்விஷயத்தில் சமஸ்தான மன்னர்களுக்கு விட்டுக்கொடுப்பதென்ற பேச்சிற்கே இடமில்லையென்பதையும் வியக்தமாக்கியிருக்கிறார். இந்திய சமஸ்தான மண்டலாதிபதிகள் தங்கள் சுயநலத்தை விடுத்து ஜனங்களின் க்ஷேமத்தையும் சுபிட்சத்தையும் நாடுவதானால், ஜவாஹர்லால்ஜியின் பொன்மொழிகளை வரவேற்று இந்தியா பூரண சுதந்திரம் பெறும் நாளை துரிதப்படுத்த வழியில் முன் வந்தவர்களாவார்கள்.

ஏதோ ஒரு பிரிவினர் வரவில்லையென்பதற்காக அரசியல் நிர்ணய மகாசபையின் பிரதிநிதித்துவ அந்தஸ்து குறைந்து விடாதென்பதை, அச் சபையின் தலைவரான பாபு ராஜேந்திரர் புள்ளி விவரங்களுடன் விளக்கிக் கூறியிருப்பது இவ்வாரக் கூட்டத்தில் மற்றொரு விசேஷமாகும். ஹிந்துக்கள் மாத்திரம் நிறைந்த ஒரு சபையை அரசியல் நிர்ணய மகாசபையென்று கூறுவது எவ்வாறு பொருந்துமென சர்ச்சில், சைமன் கோஷ்டியினர் சமீபத்தில் நடந்த பார்லிமெண்டுக் கூட்டத்தில், இந்தியாவினுடைய சிறுபான்மையோர்களுக்காக நீலிக் கண்ணீர் வடித்தனர். அவர்களின்

கூற்று, களப்பற்ற பொய்யும் பித்தலாட்டமும் நிறைந்த விஷமத்தனமான பிரசார மென்பதை பாபு ராஜேந்திரர் சிறிதும் சந்தேகமின்றி அம்பலப்படுத்தி யிருக்கிறார். பிரிட்டனுடைய மிகப் பொறுப்பு வாய்ந்த தலைவர்களும் கூட, இந்தியாவுக்கு விரோதமாகப் பொறுப்பற்ற முறையில் பொய்ப் பிரசாரம் செய்யப் பின்வாங்குவதில்லை யென்பதைத் தலைவரின் அறிக்கை உலகமறிய எடுத்துக் காட்டி யிருக்கிறது. ஹிந்துக்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர், சீக்கியர், இந்தியக் கிறிஸ்துவர், பார்ஸிகள், ஆங்கிலோ-இந்தியர் முதலிய சகல பிரிவினரின் பிரதிநிதிகளும் அடங்கிய ஒரு மகா சபையை, உண்மைப் பிரதிநிதித்துவமற்ற ஒருசாராரின் சபை யென்று சாம்ராஜ்ய வெறியர்களான சர்ச்சில் கோஷ்டியினரையும், அவர்களுடைய தாஸர்களையும் தவிர வேறெவரும் கூசாமல் கூறத் துணிய மாட்டார்கள்.

* * *

அடிமை இருள் அகன்று சுதந்திர சூரியன் உதயமாகி விட்டான். இனி எந்த சக்தியாலும் அந்த சூரியனை மறைக்க முடியாது. பிரிட்டனின் மகத்தான ஸ்தூல பலத்தையே பணிய வைத்த இந்தியர்களின் ஆத்ம சக்தி, கோஷ்டிகள், கட்சிகள் இவற்றின் சண்டித்தனத்துக்கும் சலசலப்புக்கும் அஞ்சி விடாது.

இன்று உலகில் அணு சக்திக்கும் ஆத்ம சக்திக்கும் நடந்து வரும் போராட்டத்தில் ஆத்ம சக்தியே வெற்றி பெறுமென்று பண்டித ஜவாஹர்லால் கூறி யிருப்பது உலகிலுள்ள மிருக சக்திப் பிரதிநிதிகளின் கண்களைத் திறக்குமாக!

* * *

இன்றைய தினத்தைப் போலவே, ஒவ்வொரு வருஷமும் ஜனவரி 26௳. இந்திய மகா ஜனங்கள் எடுத்துக்கொண்ட சுதந்திரப் பிரதிக்ஞை இவ் வருஷம் நிறைவேறி யிருக்கிறது. சுதந்திர தேசிய சர்க்கார் ஏற்பட்டு, அரசியல் நிர்ணய மகா சபையிலும் "இந்தியாவில் ஜனங்களால், ஜனங்களுக்காக, ஜனங்களுடைய சர்க்கார் ஏற்பட வேண்டும்" என்ற தீர்மானம் நிறைவேறி யிருக்கிறது.

சூரியோதயமான பின்னரும் கூடச் சிறிது நேரம் மூடுபனி கவிந்து கொண்டிருப்பது இயற்கை. அது போலவே, சுதந்திரோதயமாகியும் நம்மை எதிர்க்கும் அற்ப முட்டுக் கட்டைகளை உடைத் தெறிந்து, சுதந்திர சூரியன் ஜகஜ்ஜோதியாகப் பிரகாசிக்கும் நந்நாளை அதி சீக்கிரத்தில் நாம் அடையுமாறு இறைவன் திருவருள் புரிவாராக!

# வட்ட மேஜை

மாயவரம்
20-1-47

"கல்கி" ஆசிரியரவர்களுக்கு.

சமீபத்தில் மாகாண சர்க்காரால் வெளியிடப்பட்டுள்ள சம்பள உயர்வு திட்டமானது, ஆரம்பப் பாடசாலை ஆசிரியருக்கு பெருத்த ஏமாற்றத்தை அளிப்பதுடன், நீண்ட கால சர்வீஸுள்ள ஹையர் கிரேடு ஆசிரியர்கட்கு பெருஞ் சந்தேகத்தையும் அளிக்கிறது. தங்கள் பத்திரிகையின் மூலமாக அச் சந்தேகத்தை நிவர்த்தி செய்து கொள்ள விரும்புகிறேன்.

| பழைய சம்பளவிகிதம் | புதிய சம்பளவிகிதம் |
|---|---|
| 20 - ½ - 24 - 1 - 30 | 25 - 1 - 40 |

பழைய விகிதப்படி ஒரு ஹையர் கிரேடு ஆசிரியர் அடிப்படையாக 20 ரூ. சம்பளத்தில் ஆரம்பிக்கப்பட்டு 14 வருட சர்வீஸுக்குப் பிறகு 30 ரூ. சம்பளம் பெற்று வருகிறார். இப்பொழுது அவர் பெற்றுவரும் சம்பளமாகிய ரூ. 30-க்கு மேல் (12 வருஷத்துக்கு மேற்பட்ட சர்வீஸ்காரருக்கு 3 சம்பள உயர்வு ஒரு ரூபா விதம்) ரூ. 3 பெறுவதற்கு அருகதையாகிறார். ஆதலால் 30 ரூ. தற்போது பெறும் ஆசிரியர் புதிய திட்டப்படி ரூ. 33 பெறுகிறார். புதிய சம்பள திட்டப்படி அடிப்படையான சம்பளம் 25-க்கு மேல் சம்பள உயர்வு கணக்கிடப்பட்டால் (12 வருஷத்துக்கு மேல் 16 வருஷத்துக் குள்ளான சர்வீஸ்காரருக்கு 3 சம்பள உயர்வு 1 ரூ. விதம்) ரூ. 3 அதிகம் பெறுகிறார். அதாவது 25 + 3 = 28 ரூ. தான் பெறுகிறார். தற்போது 30 ரூபா பெறும் ஆசிரியர் 28 ரூபா பெறுவதற்கு அருகதையாகிறார். அதிகச் சம்பளம் கோரிய ஆசிரியருக்கு ஏற்கனவே இருந்ததைவிடக் குறைந்த சம்பளம் கிடைக்கிறது. ஆதலின் இச் சம்பள உயர்வு இப்பொழுது பெற்று வரும் சம்பளத்திற்கு மேலாகவா, அல்லது இப்போது ஏற்படுத்திய புதிய திட்டத்தின் அடிப்படையான சம்பளம் ரூபா 25-க்கு மேலாகவா கணக்கிடப்படும் என்கிற சந்தேகத்தை நிவர்த்தித்தால், மிக்க நன்றியுள்ளவனா யிருப்பேன்.

சி. கோவிந்தசாமி.
முனிஸிபல் பாடசாலை ஆசிரியர்.



பலூன் கடைக்காரர்:— ஸார், ஸார்! என்ன ஸார்! காசு கொடுக்காமலேயே கிளம்பிட்டீங்களே?

# கைமேல் பலன்

"சங்கர்"

பிரேதப் பிரயத்தனம் என்று சொல்லுவார்களே, அதுகூடத் தேவலை என்னும் விட்டு இரண்டு 'தர்பார் பிளாஸ்க்' வாங்கிக் கொண்டு வருவதற்குள். கூட்டத்துக்குள் நுழைந்து, இடித்துத் தள்ளி எப்படியோ இரண்டு பிளாஸ்க்குகளை வாங்கிக் கொண்டு வெற்றிக் குறியுடன் வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தேன். எதிரில் என் நண்பர் ராமகிருஷ்ணன் வந்தார். என் கையில் 'பிளாஸ்க்' இருப்பதைப் பார்த்ததும் அவர் முகத்தில் சந்தோஷக் குறி தென்பட்டது. அழகக் குழைவாகக் கெஞ்சினார் மனுஷர். என் கல் மனம் அவருடைய சர்க்கரைப் பேச்சைக் கேட்டதும் பாகாய் உருகிப் போய்விட்டது. "ஒன்று பத்து ரூபாய்! 'பிளாக் மார்க்கெட்'டிலே வாங்கினேன்!" என்று அவரிடம் புளுகினேன்.

"என்ன விலையானாலும் பாதகமில்லை, ஸார்! என் மனைவியின் உபத்திரவம் தான் பெரிசாய்ப் போச்சு! கொஞ்சம் பெரிய மனசு பண்ணுங்கள்!" என்று என் கையில் பலவந்தமாக இருபது ரூபாயைத் திணித்தார்.

"சரி, நீங்கள் இவ்வளவு தூரம் வற்புறுத்தும்போது எப்படி இல்லையென்பது?" என்று பணத்தை வாங்கிக் கொண்டு 'பிளாஸ்க்' இரண்டையும் அவரிடம் கொடுத்து விட்டு, வீட்டை நோக்கி நடையைக் கட்டினேன்.

"ஹாம்...... இன்றைக்கு நான் நரி முகத்தில் தான் விழித்திருக்க வேணும். இல்லாமற் போனால் எனக்கு ஆறு ரூபாய் லாபம் கிடைத்திருக்குமா?" என்று பெருமையுடன் என் மனைவி கமலாவிடம் சொன்னேன்.

"அடேயப்பா! இதற்கே நீங்கள் இப்படிப் பெருமை யடித்துக் கொள்கிறீர்களே, நான்னு இன்னிக்கு நரி முகத்திலே விழிச்சிருக்கேன்!" என்றாள் அவள்.

"என்னடி, என்னமோ பிரமாதப்படுத்தறே? விஷயத்தைச் சொல்லேன்!" என்று கேட்டேன்.

"நீங்களும் மனுஷர்தான்! ஆனாலும் கோடியாத்து ராஜத்தோட அகமுடையான் சமர்த்துவருமா, என்ன? பாவம்! எனக்காகத் தேடாத இடமெல்லாம் தேடி, 'பிளாக் மார்க்கெட்'டிலே ஒன்னு பதினைந்து ரூபாய் என்று இரண்டு 'பிளாஸ்க்' வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தார். என் தம்பி சமாசாரமோ, தச்சிப்பு பொறுக்கவில்லை. உங்களுக்கும் ஒன்று வேணுமோ என்று மளிகைக் கடைக்கு வைத்திருந்த முப்பது ரூபாயை எடுத்துக் கொடுத்துட்டேன்!" என்றாள்.

"அது யாருடி, ராஜம்?" என்று கேட்டேன்.

"அவள் தான் கோடியாத்து ராமகிருஷ்ணன் சம்சாரம். அவரைத்தான் உங்களுக்கும் தெரியுமே!" என்றாள் அவள்.

"சரி சரி; அப்படியென்றால் இன்னிக்கு நீயும் நரி முகத்திலே விழிக்கலே, நானும் நரி முகத்திலே விழிக்கலே! ராமகிருஷ்ணன் தான் நரி முகத்திலே விழித்திருக்கிறான்!" என்றேன் நான்.

"ஏன், என்ன?" என்று கேட்டாள்.

விஷயத்தைச் சொன்னேன். அவளுக்குத் தூக்கிவாரிப் போட்டது. இருவரும் ஒருவரை யொருவர் பார்த்து விழித்தபடி நின்றோம்.

# கம்பர் தரும் காட்சி

**டி.கே.சி.**

## 166. விரத்தில் வீரம்.

**ரா**மனது குரலில் மாரீசன் "உயிர் போகிறதே" என்று கூக்குரலிட்டான். சீதையின் காதில் அந்தச் சப்தம் விழுந்தது. கலக்கம் அடைந்தவளாய் லக்ஷ்மணனைப் பார்த்து "ஏன் இங்கேயே நிற்கிறாய்? நீயும் ஒரு தம்பியா?" என்று கேட்டு விட்டாள்.

லக்ஷ்மணன் மிக்க பரிவுடன் இதெல்லாம் அரக்கர்களுடைய ஏமாற்றம் தான்; ராமனுக்கு அந்த விதமாக ஒன்றும் நேராது; அவனுடைய வீரம் தைரியம் எல்லாம் சமானியப் பட்டதல்ல" என்று சொல்லிச் சீதையைச் சாந்தப்படுத்தப் பார்த்தான்.

ஆனால் சீதையினுடைய மனக் கலக்கத்தில் லக்ஷ்மணனது வார்த்தை ஏற்கவில்லை. கவலையும் கோபமும் முன்னினும் அதிகரித்து விட்டது. "நீ இங்கே நின்றுகொண்டிருக்கிற காரியம் சரியான காரியம் அல்ல" என்று இரக்கமில்லாமல் பகைமையுடனேயே பேசிவிட்டாள்.

மனக் கலக்கம் இன்னும் அதிகமாகவே உண்டாகிறது. உள்ளத்தைச் சின்னபின்னப்படுத்துகிறது. அதிலிருந்து என்ன நேருகிறது பார்ப்போம்.

காட்டுக்குள் பர்ணசாலை இருக்கிறது. பர்ணசாலை கட்டுவதில் லக்ஷ்மணன் ரொம்பவும் கைதேர்ந்தவன் என்பது தெரியும். பர்ண சாலையை எப்பொழுதும் துப்புரவாய் வைத்திருக்கிறான். அதோடு, சுற்றியுள்ள இடத்தையும் துப்புரவாக வைத்திருக்கிறான் என்பதை எடுத்துச் சொல்ல வேண்டாம். காடு அடராதபடி செடிகளையும் ஆங்காங்கு வெட்டிப் பர்ண சாலைக்குச் சிறிது தூரத்தில் சில சில வேளைகளில் எரிய விடுவது வழக்கம். வழக்கம்போல போல அன்றைக்கும் செடி கொடிகளையெல்லாம் ஒரு மூலையில் குவித்து எரிய விட்டிருந்தான். அது ஒரு பெருங் காட்டுத் தீப்போல விசாலமாகவும் அடர்ந்தும் எரிந்து கொண்டிருந்தது.

லக்ஷ்மணனிடம் கோப வெறி கொண்டவளாய்ப் பேசுகிறாள் சீதை "ஒரு நாள் பழகினாலே அன்பு ஏற்பட்டு அதற்காக உயிரை விடுவார்களே! உண்மை அப்படியிருக்க, மக்களில் ராமன் சாமான்யப் பட்டவனா? அவனைப் போல் வேறு மனுஷருண்டா? அவனுக்கு உயிராபத்து ஏற்பட்டு விட்டது என்பதைத் தெரிந்தும், யாதொரு கிலேசமும் இல்லாமல் இருக்கிறாய். சரி சரி, வேறு என்ன எண்ணைக் கிடக்கிறது?"

'ஒருபகல் பழகினார்
உயிரை ஈவரால்;
பெருமகன் உலைவுறு
பெற்றி கேட்டும்நீ
வெருவலை நின்றனை;
வேறென்? யான்இனி
எரியிடை வீழ்ந்(து)உயிர்
துறப்பல் ஈண்(டு)' எனா.

[பெருமகன் உலைவுறு பெற்றி: ராமனுக்கு உயிர் போகும் நிலைமை; கேட்டும்: அவனுடைய கூக்குரலைக் கொண்டு கேட்டும்; வெருவலை நின்றனை: பயம் கொள்ளாது நிற்கிறாய்; வேறு என்: சரி சரி உன்னைப் பற்றி வேறு என்ன நினைக்க இருக்கிறது: யான் இனி எரி இடை வீழ்ந்து உயிர் துறப்பல்: இனிமேல் எனக்கு என்ன செய்ய கிடக்கிறது: இதோ எரிந்து கொண்டிருக்கிற நெருப்பில் விழுந்து உயிரை இந்த க்ஷணமே விட்டு விடுகிறேன் என்று சொல்லிக்கொண்டு தானே.

குறிப்பு:—வேறு என்: சீதைக்கு ஏற்பட்ட கையற்ற நிலையில் அறிவு கலங்கியவளாய்ச்

சொன்ன சொல் இது. 'உன்னுடைய எண்ணம் கெட்ட எண்ணம்' என்பதை அடக்கமாகப் புழுங்கிச் சொல்லுகிற வார்த்தை இது. வார்த்தையோடு நிற்கிறதா காரியம்! வார்த்தைக்குள் கிடக்கிற உணர்ச்சி வேகம், செயலை நோக்கியே செல்லுகிறது. அக்னிப் பிரவேசம் செய்யவும் துணிந்து விட்டான், அல்லவா!]

புகையும் சுவாலையுமாக ஒரே சிவப்பாய்ச் சிவந்து எரிந்து கொண்டிருந்த நெருப்பைப் பார்த்து ஓடுகிறான் சீதை.

தாமரை வனத்திடைத்
தாவும் அன்னம்போல்,
தூமவெங் காட்(டு)எரி
தொடர்கின் றான்தனைச்,
சேமவிற் குமரனும்
விலக்கிச், சீறடிப்
பூமுக நெடுநிலம்
புல்லிச் சொல்லுவான்.

[தாமரை வனத்திடை தாவும் அன்னம் போல்: செந்தாமரைக் காட்டுக்குள் உல்லாசமாக ஓடிப்புகும் அன்னம் போல; தூமவெங்காட்டு எரி: புகையோடு காந்தி எரியும் வெந்த நெருப்பை நோக்கி; சேமவிற் குமரனும்: காப்பதற்காக வில்லைக் கையில் கொண்டிருந்த லக்ஷ்மணனும்; விலக்கி: குறுக்கே விழுந்து சீதையை விலக்கி; சீறடிப் பூமுக நெடுநிலம்; அவளுடைய சிறிய அடியான புஷ்பத்தின் முன்னே கிடந்த நெடுநிலைத்தை; புல்லி: நிலத்தோடு நிலமாகப் படிந்து,—சொல்லுவான்.]

குறிப்பு:—வைஸ்வதி கடாக்ஷம் என்றும், ஆங்கிலத்தில் 'இன்ஸ்பிரேஷன்' என்றும், கவி சம்பந்தமாகச் சொல்லுவதுண்டு. எரிவிடை வீழ்ந்து உயிர் துறப்பன் என்று சொன்ன உடன், 'தாமரை வனத்திடைத் தாவும் அன்னம்போல், தூமவெங் காட்டு எரி தொடர்கின்றான் தனை' என்று சொல்ல வருகிற தென்றுல், கடாக்ஷம்தான். இன்ஸ்பிரேஷன்' தான்.]

லக்ஷ்மணன் சொல்லுகிறுன்: "என்ன காரியம் இது, நீர் உயிரை விடுவாவது? நீர் சொன்ன சொல் என்னைப் பயப்படுத்துகிறதே! உமக்கு மாறுக நான் ஒன்றும் சொல்லவில்லை, செய்யவில்லை. இது உறுதி. நீர் மனசிலுள்ள துயரத்தை நீக்கி இங்கேயே இரும். நான் இதோ போகிறேன்."

'துஞ்சுவ தென்னை! நீர்
சொற்ற சொல்லையான்
அஞ்சுவென்; மறுக்கிலென்;
அவலம் தீர்ந்(து)இனி
இங்கிரும்; அடியனேன்
ஏகு கின்றனென்;—
வெஞ்சின விதியினை
வெல்ல வல்லமோ?'

[துஞ்சுவது என்னை: உயிரை விடுகிறது என்ன காரியம்? வேண்டாத காரியம் அல்லவா: நீர் சொற்ற: நீர் சொன்ன: அவலம்: துன்பம்: இங்கிரும்: இங்கேயே இரும்: வெஞ்சின விதியினை வெல்ல வல்லமோ: என்ன ஆங்காரம் காட்டுகிறது விதி நம்மிடம்? அந்த விதியை வெல்ல முடியுமா: சீதையைச் சமாதானப் படுத்துவதற்காக அந்த இடத்தை,விட்டுப் போகவே துணிந்து விட்டான். போகிறேன் என்றும் சொல்லி விட்டான். ஆனாலும் மனசு கேட்கவில்லை. 'அடடா, விதி என்ன பாடு படுத்துகிறது? அதை யாரால் வெல்ல முடியும்?' என்ற வார்த்தை அவனுக்குத் தெரியாமலே வாயை விட்டு வருகிறது.]

"இதோ போகிறேன் — அடடா, கேடானது எப்படி வந்து நம்மை வளைத்துக் கொள்ளுகிறது! ராமனது ஆணையை நீர் மறுத்து என்னைப் போ என்கிறீர். நீர் இருக்கிறதை எண்ணினுல், யாதொரு ஆணையுமில்லாத தனிமை அல்லவா?"



"நேத்து பத்திரிகையிலே நீங்க ஒரு சோகரஸக் கதை எழுதி இருந்தீங்களே, அது ரொம்ப நல்லா இருந்ததுங்க, படிக்கப் படிக்க ஒரே சிரிப்பா வந்ததுங்க!"

'போகின்றேன் அடியனேன்,
பொருந்தி வந்துகே(டு)
ஆகின்ற(து)! அரசன்தன்
ஆணை நீர்மறுத்(து)
ஏகின்றீர்! இருக்கின்றீர்
தனியிர்!' என்றுபின்
வேகின்ற சிந்தையான்
விடைகொண்(டு) ஏகினான்.

[பொருந்தி வந்து கேடு ஆகின்றது: காலத்தை எதிர்பார்த்து உடன் வந்த கேடாவது. பொருந்திய காலம் வந்து விட்டது என்று தொழில் செய்கிறது இப்போது: அரசன் தன் ஆணை நீர் மறுத்து ஏகு என்றீர்: இந்தக் காட்டில் நமக்கு அரசனாயுள்ள ராமனது ஆணையை மறந்து என்னைப் போ என்கிறீர்: இருக்கின்றீர் தனியிர்: தனியாக இருக்கின்றீர்; என்று பின்: என்று சொல்லிச் சிறிது தாமதித்து, மறுபடியும் ஒரு தடவை, 'போகின்றேன்' என்று சொல்லிக் கொண்டு போகிறான்.]

லக்ஷ்மணன் என்றால் அநீதியைச் சகிக்க முடியாதவன். கோபாவேசம் வந்துவிடும். யாரையும் மதியாமல் கடூரமாய்ப் பேசி விடுவான். அலென கேமாய்ப் பேசுவான். அத்தகைய மனப்பான்மை உடையவனான அவன் சீதை சொன்ன கடுமையான வார்த்தைகளை எப்படிச் சகித்துக் கொள்ளுகிறான் பாருங்கள். அவனுடைய அமைதிதான் என்ன! லவலேசம் கோபம் என்பது இல்லாமல் எத்தனைய பரிவோடு சீதையினிடம் நடந்து கொள்ளுகிறான்! வீரத்திலெல்லாம் வீரம் இதுதானே!

# வான சஞ்சாரம்

**இசைத்தேனீ**

நமது புல்லாங்குழல் வித்வான்களில் ஸ்ரீ டி. ஆர். மகாலிங்கம் பால்ய மேதையாய் மேடையில் தோன்றிப் புகழ் பெற்றவர். அபூர்வ மனோதர்மமும் அசாத்ய வேலைப்பாடுகளும் கொண்டு குழலைக் கையாளுபவர். ஆனால் அவரது புகழுக்குக் காரணமான அந்த மேதைத் தன்மை அவரது தனிப் பாணியழகை ஒரே நிலையில் வைத்துக்கொள்ள முடியாமல் சில சமயங்களில் செய்து விடுகிறது. 18௳ சென்னையில் நடந்த அவரது கச்சேரி மேற்குறித்தவைகளுக்கெல்லாம் அத்தாட்சியாக இருந்தது. கௌரிமனோஹரி, சங்கராபரணம், கமாஸ் ராகங்களிலும் உருப்படிகளிலும் அவரது தனி வழி பிரதிபலித்தது. அவருக்குப் பக்க வாத்யமாய் அமைந்த பாலசுப்ரமணியனின் வயலின் வாசிப்பும் அன்று வெகு ஜோராக இருந்தது.

16௳ சென்னையிலிருந்து கேட்ட ருக்மிணி ராஜகோபாலனது கானம் எதிர்பார்த்தது போல் மிகச் சிறப்பாக இருந்தது. ராகங்களையும் உருப்படிகளையும் வெகு நிதானமாயும், அநாயாசமாயும், அழகிய மனோதர்ம வேலைப்பாடுகளுடனும் வழங்கினார். ஸிம்மேந்திரமத்யமமும், தன்யாசியும் முதன்ஸ்தானத்துக்குப் போட்டி யிட்டன. கடைசியாகப் பாடிய ராகமாலிகை தெளிவாயும் பாவப் பொழிவாயும் மனதை உருக்கியது.

19௳ சென்னையில் பிற்பகலில் ஒரு மணி நேரம் பாடிய எஸ். ஸ்ரீனிவாஸ ராவ் சாரீர சம்பத்தும், மனோதர்மமும் படைத்தவர். அவரது தன்யாசி, சாரங்கா, பிருந்தாவன சாரங்கா ராகங்கள் வசீகரமாயிருந்தன.

அன்றிரவு அதே நிலையத்தில் கச்சேரி செய்த பருத்துவக்குடி ராஜகோபாலய்யருக்குச் சாரீரம் வெகு சௌகரியமாக அமைந்தது. எனவே அவரது கச்சேரியும் முதல்தரமாய் வாய்த்தது என்று சொல்லத் தேவையில்லை. கந்த தன்யாசி, நாட்டைக்குறிஞ்சி ராகங்களில் அபூர்வ மனோதர்மத்துடன் அழகு சஞ்சாரங்களை வாரிக் கொட்டினார். 'ஜகதீச' உருப்படியில் ஸ்வரப்ரஸ்தாரம் சுருக்கமாயினும் பிருவாயிருந்தது.

* * *

14௳ காலையிலும் மாலையிலும் திருச்சியிலிருந்து கேட்ட எம். ஆர். வாசவாம்பாளின் கானம் குறிப்பிடத் தக்கது. பைரவி, சாவேரி, கல்யாணி, கரஹரப்ரியா ராகங்கள் தரமாயிருந்தன.

15௳ காலை திருச்சியிலிருந்து, சுகமான வழிகொண்ட ஒரு கானம் கேட்டது. யதுகுல காம்போதி, தோடி ராகங்களும் உருப்படிகளும் களைப்பு மிகுந்திருந்தன. பாடியவர் பி. ராஜமய்யர்.

18௳ சென்னையில் திருப்பத்தூர் பாக்யலக்ஷ்மி ஜீவன் நிறைந்த குரலில், நல்ல தேர்ச்சியும் விரு விருப்பும் கொண்டு பாடிய கச்சேரி சிலாக்யமாயிருந்தது. ஆபேரி, மத்யமாவதி ராகங்கள் சுகமாயிருந்தன. வஜ்ரகாந்தி ராகத்தில் பாடிய 'ஜீவமுரளி' உருப்படி மனதைக் கவர்ந்தது.

19௳ திருச்சியில், டி. எஸ். லோகநாதன் கச்சேரி முழுதும் தமிழ் உருப்படிகளாகவே இருந்தன. சாருகேசி, தன்யாசி, ஷண்முகப்ரியா, கரஹரப்ரியா ராகங்கள் பெருக்கப் பொழிவுடன் சஞ்சாரக் கோவையழகும் கொண்டு தரமாயிருந்தன. உருப்படிகள் பாவப் பொழிவுடன் உருக்கமாயிருந்தன.

அன்றிரவு அதே நிலையத்திலிருந்து கேட்ட பகுர் பி. வி. பொன்னம்மாளின் கானமும் சிறப்பாயிருந்தது. ஸிம்மேந்திரமத்யமமும், இறுதி ராகமாலிகையும் கவனத்தை இழுத்தன.

20௳ திருச்சியில் பாடிய பகுர் கே. ராதாமணிக்கு இனிய குரல், நல்ல வழி. தன்யாசி, ஆபேரி, காம்போதி ராகங்கள் சுகமாய் வெளிவந்தன. கடைசியில் கேட்ட பூர்விகல்யாணி எல்லாவற்றையும் தூக்கியடித்தது.

★ ★ ★ புது டில்லி அகில இந்திய ரேடியோ நிலயத்திலிருந்து அயல் நாடுகளில் உள்ள இந்தியர்களுக்காக ஒலிபரப்புத் திட்டம் நடைபெற்று வருகிறது. மேற்படி திட்டத்தின் கீழ் தென்னாட்டின் தொழில் வளப் பெருக்கத்துக்காக அரும் பெரும் தொண்டு இயற்றி வரும் வள்ளல் அளகப்பச் செட்டியார் ஒலி பரப்பிய பிரசங்கத்தை மிக்க மகிழ்ச்சியுடன் வெளியிடுகிறோம். இந்தப் பிரசங்கத்தில் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்காகச் சிறந்த கருத்துக்களோடு உயரிய வேதாந்த தத்துவங்களையும் பிணைத்திருப்பதைக் காணலாம்.

# நான்காவது வல்லரசு: பாரததேசம்!

**டாக்டர் ஸர் ஆர். எம். அளகப்பச் செட்டியார்**

நம் நாடு பிரிட்டிஷாரின் நூற்றைம்பது ஆண்டுகளின் ஆட்சியின் காரணமாக அடைந்திருக்கும் அமைதியைக் குறித்து நாம் சந்தோஷமடைய வேண்டும் என்று பலர் சொல்லுகின்றனர். இவ்வித மாயக் கொள்கையில் ஈடுபட்டவர்கள், நம் நாட்டின் மக்கள் பறிகொடுத்திருக்கும் பல வசதிகள் பிரிட்டிஷாரின் ஆட்சியினால்தான் என்பதை மறந்து போகின்றனர். பிரிட்டிஷார் சென்ற ஆண்டுகளில் தங்களுடைய சுயநலத்துக்காகவே நம் நாட்டை வேட்டையாடினார்களே தவிர, நம் நாட்டு மக்களின் முன்னேற்றத்தை முக்கியக் கொள்கையாக ஒரு காலத்திலும் கருதவில்லை.

தற்காலம் நிறுவப்பட்டிருக்கும் ஆட்சியில் ஒரு புதிய சகாப்தம் ஏற்படுத்த வழி உண்டு. இந்திய மக்கள் தங்கள் முன்னேற்றத்துக்கான பிரச்னைகளை ஆராய்ந்து நாட்டின் தொழிற்சாலை அபிவிருத்திக்கு வேண்டிய முயற்சிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இம் முயற்சிகள் பிரிட்டிஷாரையோ அல்லது அவர்களின் வியாபாரங்களையோ எப்படிப் பாதிக்கும் என்ற கவலை கூடாது.

சமீப காலத்தில் நம்மில் கனம் விஸ்வேஸ்வரய்யா போல் உள்ள மேதாவிகள் சிலர், தொழில் அபிவிருத்தி செய்யாவிடில் நாம் அழியவே நேரிடும் என்று எச்சரிக்கை செய்து வருகிறார்கள். தொழில் அபிவிருத்திக்காக ஒரு திட்டம் வகுத்து அதன் பிரகாரம் ஒவ்வொரு அம்சத்தையும் படிப்படியாக நிறைவேற்றி அதன் மூலமாக மக்களின் பொருளாதார நிலையை (Purchasing power) என்று ஆங்கிலத்தில் சொல்லலாம். விருத்தி செய்ய வேண்டும். இது செய்யும் வரை மக்களுக்கும் தாய் நாட்டுக்கும் நம் கடமையை நாம் செய்ததாக ஆகாது. மனித சமூகம் நாளுக்கு நாள் முன்னேற்றம் அடைந்து வருகிறது. விஞ்ஞான வளர்ச்சியும் தொடர்ச்சியாகப் பெருகி வருகிறது. மனிதனுடைய தேவைகளும் அதிகரித்து வருகின்றன. சமூக வளர்ச்சி முன்னேற்றமடைவதற்குத் தொழில் அபிவிருத்தி இன்றியமையாததாகும். தொழிற்சாலைகள் கட்டுப்பாடாகவும் முறைப்படியும் ஒரு தேசிய திட்ட அமைப்புக்குள் நிறுவப்பட வேண்டும்.

தொழிற்சாலைகளை இரு பெரிய பிரிவுகளாகப் பிரிக்கலாம். (1) இயந்திர சாதனத் தொழிற்சாலை. (2) குடிசைத் தொழிற்சாலை. நூற்றுக்குச் சுமார் எண்பது மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டுக் கிராமங்களில் வாழ்ந்துவரும் இந்நாட்டில் குடிசைத் தொழில் மிகவும் அவசியமாகும். விவசாயிகள் ஓய்வு எடுக்கும் காலங்களிலும், வயோதிகர்களும், குறிப்பாகப் பெண்களும் முக்கியக் குடிசைத் தொழில்களாகிய நூல் நூற்பது, பாய் முடைவது, கைத்தறி ஜமக்காளம் செய்வது, தோல் பதனிடுவது போன்ற தொழில்களில் ஈடுபடுவதற்கு முன்வர வேண்டும்.

ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் இந்திய நாட்டுத் தொழில், கலை, விஞ்ஞானம் மற்ற

நாட்டுக் கலைகளைப் பார்க்கிலும் சிறந்து இருந்ததாகச் சரித்திரம் கூறுகிறது. சென்ற சில நூற்றாண்டுகளாக அன்னிய ஆட்சிக்கு அடிமைப்பட்டதிலிருந்து இங்கு தொழில் வளர்ச்சியும் கலை வளர்ச்சியும் குறைந்து விட்டது. நூறு ஆண்டுகளாகத்தான் உலகத்தில் விஞ்ஞான அறிவு வளர்ந்து இயந்திர சாதனங்கள் பெருகி மக்கள் வாழ்க்கையும் சீர்பட்டு வந்துள்ளது. அன்னியர்கள் நலனுக்காக ஏற்பட்ட ஆட்சியில் தொழில் வளர்ச்சிக்கு இடம் ஏது? சாதாரணமாக ஏதேனும் ஒரு தொழிற்சாலை, இது நிலைக்குமா, நீடிக்குமா, லாபம் கிடைக்குமா என்று எல்லாம் பேசிவிட்டு முயற்சி யாதொன்றும் செய்யாமல் வீண் காலம் கடத்துவது நம்முன் வழக்கமாகப் போய் விட்டது.

சேர்ந்தாற்போல் ஏக காலத்தில் இயந்திரங்கள் செய்யும் தொழிற்சாலைகள், மக்களுக்கு அவசியப் பொருள்கள், கிராமக் கைத்தொழில்கள் இவைகளின் உற்பத்திக்கும் அபிவிருத்திக்கும் ஏற்பாடுகள் செய்ய [illegible]ண்டும். இவ்வாறு செய்யுங்காலத்தில் லாபத்தையே முக்கியமாகக் கருதாமல், சில தொழிற்சாலைகள் நஷ்டத்தினால் சிரமப்பட்டாலும் தேசப் பாதுகாப்புக்கு வேண்டி நஷ்டத்தைக் கருதாமல் அவைகளை அவசியம் நடத்த வேண்டும். அத்துடன் புராதனமாகத் தொன்றுதொட்டு நடத்தி வந்த கைத்தொழில்களை அபிவிருத்தி செய்வதும் நமது கடமையாகும். அப்படிச் செய்வதனால் லக்ஷக்கணக்கான மக்கள் கைத்தொழிலில் ஈடுபட்டுத் தங்கள் வாழ்க்கையைக் கௌரவமாகவும் லாபகரமாகவும் நடத்துவதற்கு ஏதுவாக இருக்கும். அதனால்தான் காந்தி அடிகள் சர்க்காவின் அற்புதத்தை மீண்டும் மீண்டும் நமக்கு வற்புறுத்திக் கூறி, சர்க்காவை நம் தேசச் சின்னமாகக் கருதச் சொல்லுகிறார்.

நம் தேசம், நீர்வளம், நிலவளம், உலோக சம்பத்து முதலிய பல இயற்கை அருள்களைப் பெரிதும் அடைந்திருந்தும் தரித்திர நாராயணனே குடியிருப்பதற்குக் காரணம் என்னவென்று கவலைப்பட வேண்டியிருக்கிறது. இந்தியாவைக் காட்டிலும் சிறிய ஜனத்தொகை பிருந்தும் பல் இயற்கை அருள்களில் நம்மைக் காட்டிலும் குறைவுபட இருந்தும், எல்லாச் சம்பத்துகளிலும் நம் தேசத்து மக்களைக் காட்டிலும் அமெரிக்கர் சந்தோஷமாக இருப்பதற்குக் காரணம் என்ன? சிறிது ஆராய்ந்து பார்த்தால் அது எளிதில் புலன்படும். அமெரிக்காவில் தங்கள் தேசத்துச் சாமான்களுக்குத் தங்கள் நாட்டிலேயே வியாபார ஸ்தலம் ஏற்பட்டு இருப்பதுதான். (இதை ஆங்கிலத்தில் Presence of a Strong Home Market என்று சொல்லலாம்.)

தேசத்துத் தொழிற்சாலைகளையும் கைத்தொழில்களையும் அபிவிருத்தி செய்வதால் பல சாமான்கள் உற்பத்தி செய்கின்றோம். தேச மக்கள் பண சம்பத்தை அடைகிறார்கள். அப் பண சம்பத்தைக் கொண்டு தேசத்தில் உற்பத்தியாகும் சாமான்களை வாங்குகிறார்கள். அதனால் சாமான் உற்பத்திக்கு மீண்டும் மீண்டும் முடிவில்லாத ஆதாரம் ஏற்படுகின்றது. இப்படிச் சாமான்கள் உற்பத்தி, பண சம்பத்து, அதனால் மேற்கொண்டும் உற்பத்தி, மீண்டும் சம்பத்து—இவ்வாறாக மாறி மாறி அந்தாதிபோல் தேசத்துத் தொழிற்சாலை அபிவிருத்தியும் பண சம்பத்தும் பொங்கி வருகின்றன. இம் முறையை நாமும் பின்பற்ற வேண்டும். அப்படிச் செய்வோமாகில் நம்முடைய தாய்நாடு குசேலர் நாடாக இல்லாமல் குபேரர் நாடாகக் கூடிய சீக்கிரத்தில் மாறிவிடும்.

தொழிற்சாலை அபிவிருத்தி ஏற்படும் காலத்தில் கிணறு வெட்ட பூதம் புறப்படுவதுபோல் முதலாளி, தொழிலாளி, சர்க்கார் உரிமை, தனிப்பட்ட உரிமை என்ற பூதங்கள் தலையைத் தூக்கலாம். ஆனால் நாம் அப்பூதங்களைத் தலை காண வொட்டாது முளையிலேயே கிள்ளிவிட சங்கல்பம் செய்து கொள்ள வேண்டும். நம் நாட்டுத் தொழிற்சாலைப் பிரமுகர்கள், நம் நாட்டில் உள்ள இயற்கைப் பொருள்களையும் வசதிகளையும் உபயோகப்படுத்தித் தேசத்தின் செல்வத்தை வளர்க்க வேண்டுமேயொழிய, சிலர் நன்மைக்காகப் பலர் வாழ்க்கை



பின் சந்தோஷத்தைக் கெடுக்கலாகாது. தொழிலாளிகளைத் தங்களுடைய பங்காளிகளாகப் பாராட்ட வேண்டுமே தவிர, கூலிக்குச் சேர்த்த ஜனங்களாகக்கருதுவது பெரும் பாவம். சிறு பணத் தொகைக்காக மனிதனை மனிதன் அடிமையாக்கக் கருதுவது மன்னிக்க முடியாத தவறு. அன்னியரின் அடிமைத்தனத்தி லிருந்து விடுபட்டு, நம் நாட்டுக் குபேரர்களுக்கு அடிமைப்படுவது நினைவிலும் தகுமோ? ஆகையால் பெரிய தொழிற்சாலைகளை அரசாங்கத்தார் பொது ஜனங்களுக்குச் சொந்தமாக்கி அவைகளில் ஏற்படும் கொள்ளை லாபங்களை ஒரு சிலர் அடையாமல் தேசத்துப் பொக்கிஷம் விருத்தி யடையுமாறு செய்ய வேண்டுவது அரசாங்கத்தின் கடமை. இப்படிச் செய்தால் தொழிற்சாலை அபிவிருத்தியானது பொது மக்களின் அபிவிருத்திக்குக் காரணமாகும்.

ஓரளவுக்குப் பொதுஜனப் பிரதிநிதிகள் கொண்ட அரசாங்க ஆட்சி தற்சமயம் நடப்பதால் இவர்கள் கூடிய சீக்கிரத்தில் தொழிற்சாலைகள் எவை எவை, தனிப்பட்டவர்கள் நடத்துவது எவை, எவை அரசாங்கத்தார் நடத்துவது, எந்தக் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டுத் தனிப்பட்ட நபர்கள் நடத்த வேண்டும், தொழிலாளிகளின் சந்தோஷத்தையும் சம்பத்தையும் எப்படி வளர்ப்பது என்பது பற்றிப் பல திட்டங்களை வகுக்க வேண்டும். தொழிற்சாலை அபிவிருத்திக் கப்பல் ஜனநாயக சந்தோஷ சமுத்திரத்தில் அமைதியாக மிதந்து பொதுஜன சம்பத்துத் துறைமுகத்தை நோக்கிச் செல்லவேண்டும். இல்லாவிடில் பணக்காரர்களின் பேராசைப் புயல் காற்றினால் அடிபட்டுத் தொழிலாளர் புரட்சிப் பாறைகளில் மோதுண்டு கவிழ நேரிடும். ஆகையால் நமது மாலுமிகளான ஜவாஹர், ராஜாஜி போன்றவர்கள், இக் கப்பலைப் பொதுஜனச் செல்வநிலை அபிவிருத்தி என்ற ஒரே நோக்கத்துடன் பயமின்றிச் செலுத்துவார்கள் என்று நம்புகிறோம்.

நம் நாட்டு வேதார்த்தம் நம்முடைய சோர்வடைந்தமனதுக்குத் தேறுதலும் புண்பட்ட ஆத்மாவுக்கு ஆறுதலும், இடையூறு நேருங்கால் மன உறுதியும் கொடுக்கும் ஒரு தைரியக் களஞ்சியமாக இருக்கிறது. ஆனால் நாம் அந்த வேதார்த்தத்தை ஒழுங்கான முறையில் பயன்படுத்திக் கொள்ளாமல், நம்முடைய கடமையைச் செய்யாமல் ஒதுங்கி, அதை ஒளிவதற்கு ஒரு ஒதுக்கிடமாக உபயோகிக்க முயலுகிறோம். எல்லாம் ஈசன் செயல் என்று சொல்லிவிட்டு நம் கடமையை மறந்து ஈசன் தலைமேல் நம் பாரங்களைச் சுமத்திவிடுகிறோம்.

கண்ணன் காட்டிய வழி இதுவல்ல. 'உன் கடமையை இடை விடாது செய்து கொண்டேயிரு; பலனைப்பற்றிச் சிறிதளவும் நினையாது யோகியாயிரு' என்று அர்ஜுனனுக்குக் கண்ணன் உபதேசித்தார். அக் கீதை மொழியை நாம் மறந்து நாம் ஒரு நவீன கீதையைப் பின்பற்றுகிறோம். அதாவது கடமையைச் செய்யாமலேயே பலனுக்கு ஆசைப்படும் நவீன யோகிகள் ஆகி விட்டோம். இவ்வித அதர்மம் நேரிடாமல் தடுத்து நாம் ஒழுங்கான தர்மத்தைக் கடைப் பிடிப்போமேயானால் வெகு சீக்கிரம் நமது பாரத தேசம் ஜவாஹர்லால் சமீபத்தில் சொல்லியபடி அமெரிக்கா, ருஷியா, சைனா போன்ற உலகத்திலுள்ள பெரிய மூன்று வல்லரசுகளுடன் நான்காவது பெரும் தேசமாகக் கருதப்படும் என்பதற்கு ஐயமில்லை. வந்தனம்.

---

## பொழுது விடிந்தது!



# ஓர் அழகிய நங்கை

சாந்தி! டில்லியில் அரசியல் பிரவர்த்தகர், முன்னுக்கு வர ஆவல் மிகுந்த ஓர் இளைஞரின் மனைவியாகிய இவ்வடிவழகி, தனது வதன எழிலைப் பாதுகாக்க, ஆயிரக்கணக்கான சும மெல்லியர்களைப் போல புதிய முறையாகிய பாண்ட்ஸைக் கையாண்டு வருகிறாள்.

## ப்ரேரணைசக்தி பிரதிபிம்பிக்கும் கோமளவதனி, சாந்தி!

.... ஏனெனில், பூ போன்ற சருமம் பரிபூர்ண எழிலுக்கு இன்றியமையாததென சாந்தி கண்டு பிடித்துள்ளாள். பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமிலுள்ள இயற்கைத் தைலங்களால் அவள் முகத்தை சுத்தம் செய்து, மிருதுவும் மழமழப்புமாக இருக்கச் செய்கிறாள். தினம் காலை, மாலைகளில், பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் முகத்தில் பூசி, சொற்ப நேரங்கழித்து அதை மெதுவாகத் துடைத்துக் களைகிறாள். தூசும், அழுக்குமெல்லாம் அத்துடனேயே வந்து விடுகிறது. பின்பு பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தடவுகிறாள். அது சருமத்தினுட்சென்று, உலர்ந்துபோன இயற்கைத் தைலங்களை சருமத்திற்குத் திருப்பி அளிக்கிறது. வதனம் பூவிதழ்போன்ற மோகனகாந்தி வாய்க்கவும் செய்கிறது.

"என்ன பாங்கும் பதவிசுமாக குடித்தனம் பண்ணுகிறாள்!"



பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் — தினம் காலை, மாலைகளில் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமால் முகத்தைச் சுத்தம் செய்யுங்கள் — ஸோப்பு வேண்டாம். ஓரிரண்டு வாரத்தில் முகசருமம் சோதி மிக வாய்க்கும்.

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் — கோல்ட் க்ரீமைத் துடைத்துக் களைந்ததும், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் தாராளமாகப் பூசிக்கொள்ளுங்கள். அது உலர்ந்துபோன இயற்கைத் தைலங்களை சருமத்திற்கே திருப்பி அளித்து, வதனத்தை மிருதுவும், பளபளப்புமாக்கிறது. அது கண்ணுக்குப் புலப்படவும் செய்யாது.

பாண்ட்ஸ் பவுடர் — பின்பு வேண்டுமானால், பாண்ட்ஸ் பவுடர் பூசிக்கொள்ளுங்கள் — உங்கள் முகசாயலுக்குகந்த வர்ணமாகத் தேர்ந்தெடுத்து. அது முகத்திற்கு ரோஜா விதழ் போன்ற ஓர் மோகன காந்தி அளிக்க உதவும்.

# பாண்ட்ஸ் க்ரீம்ஸ்

வியாபார விவரங்களுக்கு இவ்விலாசத்திற் கெழுதவும்: எல். டி. ஸெய்மூர் & கோ., (இந்தியா) லிட்., பம்பாய் - கல்கத்தா - கராச்சி - சென்னை.



JWT

# சோலைமலை இளவரசி








கல்கி

## 5. அந்தப்புர அடைக்கலம்

**மா**றனேந்தல் இளவரசன் அப்போது தான் அடைந்திருந்த நெருக்கடியான நிலைமையை நன்கு உணர்ந்தான். தன்னைத் துரத்திக் கொண்டு வந்த எதிரிகளிடம் அவ்வளவு எளிதாக அகப்பட்டுக் கொள்வதைக் காட்டிலும் அந்தக் குறுகிய பாதையில் அவர்களை எதிர்த்து நின்று, ஒருவனுக்கொருவனாகப் போரிட்டு, தேசத் துரோகிகளில் எவ்வளவு பேரைக் கொல்ல முடியுமோ அவ்வளவு பேரையும் கொன்றுவிட்டுத் தானும் உயிரை விடுவது மேல் அல்லவா?......

இவ்விதம் சிந்தித்துக் கொண்டே பாதையின் ஒரு முடுக்கில் திரும்பிய போது, எதிரில் அவன் கண்ட தோற்றம் அதிசயமான எண்ணம் ஒன்றை அவனுக்கு அளித்தது. பாதைக்கு அருகில் நெடிதோங்கி வளர்ந்திருந்த ஒரு மரம் எந்தக் காரணத்தினாலோ அடி வேர் பெயர்ந்து கோட்டை மதிளின் பக்கமாகச் சாய்ந்திருந்தது. இரண்டொரு தினங்களுக்குள்ளே தான் அந்தப் பெரிய மரம் அப்படிச் சாய்ந்திருக்க வேண்டும். அந்த மரத்திலே ஏறி உச்சாணிக் கிளையை அடைந்தால், அங்கிருந்து சுலபமாக மதிள் சுவரின்மேல் குதிக்கலாம். பிறகு மதிள் சுவரிலிருந்து கோட்டைக்குள்ளே குதிப்பதில் கஷ்டம் ஒன்றுமிராது. ஏன் அப்படிச் செய்யக் கூடாது? தன்னைத் துரத்தி வந்தவர்களிடமிருந்து தப்புவதற்காக ஏன் சோலைமலைக் கோட்டைக்குள்ளேயே பிரவேசித்து அபாயம் நீங்கும் வரையில் அங்கு ஒளிந்திருக்கக் கூடாது? சோலைமலை மகாராஜா அச்சமயம் மாறனேந்தல் கோட்டை வாசலில் எப்போது கோட்டை விழும் என்று காத்துக்கிடக்கிறார். ஆகையால் இங்கே கட்டுக்காவல் அதிகமாக இருக்க முடியாது. தற்சமயம் பத்திரமாக ஒளிந்து கொண்டிருப்பதற்கு இதுதான் சரியான இடம். கோட்டைக்குள்ளே எத்தனையோ மூலை முடுக்குகள், யார் கண்ணிலும் அதிகமாகப் படாத இடங்கள் இருக்கவேண்டும். மேலும் மாறனேந்தல் இளவரசனைச் சோலைமலைக் கோட்டைக்குள்ளே யாரும் தேடமாட்டார்கள். கோட்டைக்குள் புகுவதற்கு வேண்டிய துணிச்சல் தன்னைத் தொடர்ந்து வரும் எதிரி வீரர்களுக்கு ஒரு நாளும் இராது.

இன்றைக்கு ஒரு பகல் அங்கே ஒளிந்திருந்து இன்பபாறினல் இரவு இருட்டியதும் வந்த வழி மூலமாகவே வெளியேறி மலையைக் கடந்து அப்பால் ஜன்ன பன்னத்தாக்கை அடைந்து விடலாம்......

இப்படி எண்ணியபோது, பக்கத்துக் கிராமத்திலிருந்து 'கொக்கரக்கோ!' என்று கோழி கூவும் சத்தம் கேட்டது. தன் மனதில் தோன்றிய யோசனையை ஆமோதிக்கும் நல்ல சகுனமாக இளவரசன் அதைக் கருதினான்.

தட்சணமே சாய்ந்திருந்த மரத்தின் மேல் சரசர வென்று ஏறினான். மரத்திலிருந்த பட்சிகள் ஏதோ மரநாயோ வேறு கொடிய மிருகமோ ஏறுகிறது என்று எண்ணிக்கொண்டு சிறகுகளை அடித்துக் கொண்டும் கீச்சுக் கீச்சு என்று கத்திக் கொண்டும் பறந்து ஓடின. அதை யெல்லாம் பொருட் படுத்தாமல் இளவரசன் மரத்தின் உச்சியை யடைந்து மதிலின் மேல் குதித்தான். மதின்மே லிருந்து அவன் கோட்டைக்குள்ளே இறங்குவதற்கு அதிக நேரம் ஆகவில்லை.

கோட்டைக்குள் இளவரசன் குதித்து இறங்கிய இடம் அழகான உத்தியான வனமா யிருந்தது. உதய நேரத்தில் இதழ் விரிந்து மலரும் பல வகைப் புஷ்பங்களின் நறுமணம் கம்மென்று வந்து கொண்டிருந்தது. ஆனல் அதை யெல்லாம் அனுபவிக்கக் கூடிய மனேநிலை அச் சமயம் உலகநாதத் தேவனுக்கு இருக்கவில்லை. உடனே எங்கேயாவது சிறிது நேரம் படுத்தால் போதும் என்று தோன்றியது. உத்தியான வனத்துக்கு நடுவில் வஸந்த மண்டபமும் அதற்குச் சிறிது தூரத்துக் கப்பால் அரண்மனையின் ஒரு பகுதியும் தெரிந்தன. ஜன நடமாட்டமே இல்லாமல் எங்கும் நிச்சப்தமாக இருந்தது. இளவரசனுடைய களைப்புற்ற கால்கள் அவனை வஸந்த மண்டபத்தை நோக்கி இழுத்துச் சென்றன.

மண்டபத்தை நெருங்கியதும் அவனுக்கு எதிரே தோன்றிய காட்சியினல் இளவரசனுடைய மூச்சு சிறிது நேரம் நின்று போயிற்று. மண்டபத்தின் பின்புறத்து மூலையிலே திரும்பிப் பெண் ஒருத்தி வந்து கொண்டிருந்தாள். கையில் அவள் புஷ்பக் கூடை வைத்திருந்தாள். ஸ்திரீ சௌந்தரியத்தைப் பற்றி மாறனேந்தல் இளவரசன் எத்தனையோ கவிகளிலும் காவியங்களிலும் படித்திருந்தான். ஆனல் இந்த மாதிரி அற்புத அழகை அது வரையில் அவன் கற்பனையும் செய்ததில்லை. சௌந்தரிய தேவதையே மானிடப் பெண் உருவம் கொண்டு அவன் முன்னல் வருவதுபோல் தோன்றியது. அந்தப் பெண்ணே தன்னுடைய அகன்ற விசாலமான நயனங்களை இன்னும் அகலமாக விரியச் செய்துகொண்டு அளவில்லா அதிசயத்துடன் மாறனேந்தல் இளவரசனைப் பார்த்தாள்.

சிறிது நேரம் இப்படி ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு ஊமைகளாக நின்ற பிறகு இளவரசன் துணிச்சலை வருவித்துக் கொண்டு "நீ யார்?" என்றான்.

வீர மறவர் குலத்திலே பிறந்த மாணிக்கவல்லிக்கு அப்போது ரோஸம் பிறந்தது. பேசும் தைரியமும் வந்தது. "நீ யார் என்று கேட்கிறாய்? அந்தக் கேள்வியை நானல்லவா கேட்க வேண்டும்? நீ யார்? கோட்டைக்குள் எப்படிப் புகுந்தாய்? அந்தப்புரத்து நந்த வனத்துக்குள் என்ன



தைரியத்தினுல் வந்தாய்?" என்று இராம பாணங்களைப் போன்ற கேள்விகளைப் போட்டாள்.

உலகநாதத் தேவன் அசந்து போய் விட்டான். அவள் சோலைமலை இளவரசியாகத்தான் இருக்க வேண்டும்! வேறு யாரும் இவ்வளவு அதிகார தோரணையுடன் பேச முடியாதென்று எண்ணினுன். அவளுடைய கேள்விகளுக்கு மறுமொழியாக ஏதாவது சொல்ல வேண்டுமென்று ஆனமட்டும் முயன்றும் ஒரு வார்த்தைகூட அவனுல் சொல்ல முடியவில்லை.

"ஏன் இப்படி விழித்துக்கொண்டு நிற்கிருய்? அரண்மனையில் மகாராஜா இல்லாத சமயம் பார்த்து எதையாவது திருடிக்கொண்டு போகலாம் என்று வந்தாயா? இதோ காவற்காரர்களைக் கூப்பிடுகிறேன், பார்! வேட்டை நாயையும் கொண்டுவரச் சொல்லுகிறேன்......"



இவ்வாறு இளவரசி சொல்லிக் கொண்டிருந்தபோது, கோட்டை மதிளுக்கு அப்பால் சிலர் இரைந்து பேசிக் கொண்டு விரைவாக நடந்து செல்லும் சத்தம் கேட்டது. அந்தச் சத்தத்தை மாணிக்கவல்லி காது கொடுத்துக் கவனமாகக் கேட்டாள். பின்னர் தனக்கு எதிரில் நின்ற வாலிபனை உற்றுப் பார்த்தாள். அவன் முகத்திலே தோன்றிய பீதியின் அறிகுறியையும் கவனித்தாள். அவளுடைய



பெண் உள்ளம் சிறிது இரக்கம் அடைந்தது.

கோட்டை மதிளுக்கு வெளியில் பேச்சுச் சத்தம் கேட்டவரையில் அதையே கவனித்துக் கொண்டிருந்த மாறனேந்தல் இளவரசன் அந்தச் சத்தம் ஒடுங்கி மறைந்ததும் மாணிக்கவல்லியைப் பார்த்து, "அம்மணி! ஏதோ தெரியாத்தனமாகத்தான் இங்கே வந்து விட்டேன். ஆனால் திருடுவதற்கு வரவில்லை. உங்கள் வீட்டில் திருடி எனக்கு ஒன்றும் ஆகவேண்டியதில்லை!" என்றான்.

மீண்டும் மாணிக்கவல்லியின் ஆங்காரம் அதிகமாயிற்று. "ஓகோ! திருடுவதற்கு வரவில்லையா? அப்படியானால் எதற்காக வந்தாயாம்? இதோ பார்!......" என்று சொல்லி விட்டு வலது பக்கம் திரும்பி, "சங்கிலித் தேவா!" என்று கூப்பிட்டாள்.

அப்போது இளவரசன் ஒரு நொடியில் அவள் அருகில் பாய்ந்து வந்து பலவந்தமாக அவளுடைய வாயைத் தன் கைகளினால் மூடினான். எதிர்பாராத இந்தக் காரியத்தினால் திகைத்துச் சிறிது நேரம் செயலற்று நின்ற இளவரசி சுய நினைவு வந்ததும் சட்டென்று அவனுடைய கைகளை அப்புறப்படுத்தி விட்டுக் கொஞ்ச தூரம் அப்பால் போய் நின்றாள். அவனைப் பார்வையினாலேயே எரித்து விடுபவள் போல் ஏறிட்டுப் பார்த்து, "என்ன துணிச்சல் உனக்கு?" என்று கேட்டாள். கோபத்தினாலும் ஆங்காரத்தினாலும் அவளுடைய உடல் நடுங்கியதுபோல் குரலும் நடுங்கிற்று.

உலகநாதத் தேவன் தான் பதட்டப்பட்டுச் செய்த காரியம் எவ்வளவு அடாதது என்பதை உணர்ந்திருந்தான். எனவே முன்னைக் காட்டிலும் பணிவுடன் இரக்கம் ததும்பிய குரலில், "அம்மணி! உன்னை மன்றாடிக் கேட்டுக் கொள்கிறேன்: மன்னிக்க வேண்டும். என்னைத் தொடர்ந்து வரும் எதிரிகளிடம் அகப்படாமல் தப்புவதற்காக இங்கே வந்தேன். என்னை அவர்களிடம் காட்டிக் கொடுத்து விடாதே! அடைக்கலம் என்று வந்தவர்களைக் காட்டிக் கொடுப்பது

தர்மமா? சோலைமலை இராஜ குமாரிக்கு அழகாகுமா?'' என்றான்.

இந்த வார்த்தைகள் மாணிக்கவல்லியின் உள்ளக்கடலில் பெருங் கொந்தளிப்பை உண்டாக்கின. ஒரு பக்கம் ஆங்காரமும் இன்னொரு பக்கம் ஆனந்தமும் பொங்கி வந்தன.

"ஆகா! என்னை இன்னார் என்று தெரிந்துமா இப்படிச் செய்தாய்? உன்னை என்ன செய்கிறேன், பார்!'' என்று அவள் கொதிப்புடன் கூறினாள் என்றாலும், குரலில் முன்னைப் போல் அவ்வளவு கடுமை தொனிக்கவில்லை.

"நீ என்னை என்ன செய்தாலும் சரிதான். உன் கையால் பெறுகிற தண்டனையைப் பெரிய பாக்கியமாகக் கருதுவேன்......ஆனால் என் பகைவர்களிடம் மட்டும் என்னைக் காட்டிக் கொடுக்க வேண்டாம். அப்படிச் செய்தால் அப்புறம் உன் ஆயுள் உள்ளவரைக்கும் வருத்தப்படுவாய்!'' என்றான் இளவரசன்.

மாணிக்கவல்லி மேலும் சாந்தமடைந்து, "இவ்வளவெல்லாம் கருப்பங் கட்டியைப்போல் இனிக்க இனிக்கப் பேசுகிறாயே, ஆனால் நீ யார் என்று மட்டும் இன்னம் சொல்லவில்லை, பார்!'' என்றாள்.

"நான் யாராயிருந்தால் என்ன? தற்சமயம் ஒரு அநாதை; திக்கற்றவன்; சேலை உடுத்திய பெண்ணிடம் வந்து அடைக்கலம் கேட்பவன். இச் சமயம் எனக்கு அடைக்கலம் கொடுத்தால் என்றென்றைக்கும் நன்றி மறவாமல் உன்னை நினைத்துக் கொண்டிருப்பேன்.''

"மாறனேந்தல் மகாராஜாவின் மகனாகப் பிறந்துவிட்டு இப்படியெல்லாம் கெஞ்சுவதற்கு வெட்கமாயில்லையா?'' என்று மாணிக்கவல்லி கேட்டபோது, மாறனேந்தல் இளவரசனுக்குத் தூக்கிவாரிப் போட்டது என்றால், அது மிகவும் குறைத்துச் சொன்னதேயாகும்.

சிறிது நேரம் திறந்த வாய் மூடாமல் நின்ற பிறகு பெரு முயற்சி செய்து, "என்னை எப்படி உனக்குத் தெரியும்?'' என்று கேட்டான்.

"ஏன் தெரியாது? நன்றாகத் தெரியும். உன்னைப் போன்ற படம் ஒன்று எங்கள் அரண்மனையில் இருந்தது.''

"இருந்தது என்றால், இப்போது இல்லையா?''

"இப்போது இல்லை. ஆறு மாதத்துக்கு முன் ஒரு நாள் அதை அப்பா சுக்கு நூறாகக் கிழித்துப் போட்டுக் காலால் மிதி மிதி என்று மிதித்தார். ஏன் இப்படிச் செய்கிறீர்கள் என்று நான் கேட்டேன். அதற்குப் பதிலாக, நீ ஒரு நாள் அவர் கையில் சிக்கிக் கொள்வாய் என்றும், அப்போது பன்னிரண்டு வேட்டை நாயை உன் மேல் சேர்ந்தாற்போல் ஏவிவிடப் போவதாகவும் சொன்னார்!''

இதைக் கேட்ட இளவரசனுக்கு உடம்பெல்லாம் சிலிர்த்தது. "அம்மம்மா! எவ்வளவு கொடுமையான மனிதர்!'' என்றான்.

"அப்பா ஒன்றும் கொடுமையான மனிதர் அல்ல. நீ மட்டும் அவரைப் பற்றி அப்படியெல்லாம் பரிகாசம் செய்து பேசலாமா? அதை நினைத்துப் பார்த்தால் எனக்கே உன்பேரில் பன்னிரண்டு வேட்டை நாய்களை ஏவி விடலாம் என்று தோன்றுகிறதே!''

"அம்மணி! உன் தகப்பனாரைப் பற்றி நான் சில சமயம் பரிகாசமாகப் பேசினது உண்மைதான். ஆனால், அதெல்லாம் அவர் அன்னியர்களாகிய வெள்ளைக்காரர்களுக்கு இடங்கொடுத்துத் தேசத்தைக் காட்டிக் கொடுக்கிறாரே என்ற வருத்தத்தினாலேதான். அவர் மட்டும் வெள்ளைக்காரர்களைச் சோலைமலை சமஸ்தானத்தி லிருந்து விரட்டி அடித்துவிட்டு முன்போல் சுதந்திரமாய் இருக்கட்டும். நான் அவருடைய காலில் விழுந்து அவரைப் பற்றிக் கேலி பேசியதற் கெல்லாம் ஆயிரந்தடவை மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்.''

"வெள்ளைக்காரர் மீது உனக்கு ஏன் இவ்வளவு ஆத்திரம்? உன்னை என்ன செய்தார்கள்? வெள்ளைக்காரச் சாதியார் எவ்வளவோ நல்லவர்கள் என்றும், கெட்டிக்காரர்கள் என்றும் அப்பா சொல்கிறார். நான் கூட அவர்களை நாலைந்து தடவை பார்த்திருக்கிறேன். ரொம்ப நல்லவர்களாய்த்தான் தோன்றினார்கள்.''

"எவ்வளவுதான் நல்லவர்களாயிருக்கட்டுமே? அதற்காக நமது தேசத்தையும் ஜனங்களையும் அன்னியர்களிடம் ஒப்படைத்து அவர்களுக்கு அடிமையாகி விடுவதா? வெள்ளைக்காரர்கள் நல்லவர்களாக இருப்பதெல்லாம் வெறும் நடிப்பு. இந்த தேசம் முழுவதையும் கைப்பற்றி அரசாண்டு இங்கே யுள்ள பணத்தையெல்லாம் கொண்டு போக வேண்டும் என்பதுதான் அவர்களுடைய எண்ணம். அதற்காக முதலில் நல்லவர்கள் போல நடிக்கிறார்கள். போகப் போக அவர்களுடைய உண்மை சொரூபத்தைக் காட்டுவார்கள். நீ வேண்டுமானால் பார்த்துக் கொண்டே இரு. மாறனேந்தல் இராஜ்யத்தைக் கைப்பற்றியதும் கொஞ்ச நாளைக் கெல்லாம் ஏதாவது ஒரு காரணத்தை வைத்துக்கொண்டு சோலைமலை இராஜ்யத்தையும் கைப்பற்றுகிறார்களா இல்லையா என்று பார்!"

"இவ்வளவெல்லாம் பேசுகிறாயே, மாறனேந்தல் கோட்டையில் பெரிய சண்டை நடக்கும்போது நீ ஏன் இங்கே வந்து ஒளிந்து கொள்கிறாய்? சண்டைக்குப் பயந்து கொண்டு தானே? மறவர் குலத்தில் பிறந்த வீரன் இப்படிச் சண்டைக்குப் பயந்து கொண்டு ஓடலாமா?"

"அம்மணி! நீ சொல்வது உண்மை தான். ஆனால் என்னுடைய சொந்த விருப்பத்தினால் நான் ஓடிவரவில்லை. சண்டைக்குப் பயந்து கொண்டும் ஓடிவரவில்லை. என் தந்தையின் விருப்பத்தைத் தட்ட முடியாமல் வெளியேறி வந்தேன். உனக்கும் எனக்கும், உன்னுடைய வம்சத்துக்கும் என்னுடைய வம்சத்துக்கும் இந்தப் பாரத தேசத்துக்குமே விரோதிகளான அன்னியர்களை எப்படியாவது விரட்டுவதற்கு வழி தேடுவதற்காகவே வந்தேன். அதற்காகத்தான் உன்னிடம் அடைக்கலம் கேட்கிறேன். அதற்காகவே எதிரிகளிடம் என்னைக் காட்டிக் கொடுக்கவேண்டாம் என்று உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்!" என்று மாறனேந்தல் இளவரசன் உணர்ச்சி ததும்பப் பேசினான்.

அவனுடைய வார்த்தைகள் மாணிக்கவல்லியின் மனதைப் பெரிதும் கனியச் செய்து அவளுடைய கண்களில் கண்ணீர்த் துளிகளையும் வருவித்தன. ஆயினும் அதை அவள் ஒப்புக் கொள்ள விரும்பவில்லை.

"உங்களுடைய விவகாரம் எல்லாம் எனக்குத் தெரியாது. பார்க்கப் போனால் நான் அந்தப்புரத்தில் அடைபட்டுக் கிடக்கும் பெண்தானே? இந்தக் கோட்டையின் மதிலுக்கு அப்பால் நான் சென்றதே இல்லை. அரண்மனை உப்பரிகையிலிருந்து பார்த்தால் தெரியும் மலையையும் காடுகளையும் தவிர வேறு எதுவும் பார்த்ததே இல்லை. தேசம், இராஜ்யம், சுதந்திரம், அடிமைத்தனம் என்பதையெல்லாம் நான் என்ன கண்டேன்? உன் தகப்பனுடைய வார்த்தை உனக்கு எப்படிப் பெரிதோ, அப்படியே என் தகப்பனாரின் விருப்பம் எனக்குப் பெரிது. நியாயமாகப் பார்த்தால் என் தகப்பனாரின் ஜன்ம விரோதியான உன்னை நான் உடனே காவற்காரர்களிடம் பிடித்துக் கொடுத்திருக்க வேண்டும். அதிலும் அந்தப்புரத்து நந்தவனத்துக்குள் வரத் துணிந்த உன்னிடம் துளிக்கூட தாட்சண்யம் பாராட்டக் கூடாது. ஆனாலும் நீ 'அடைக்கலம்' என்றும், 'காப்பாற்ற வேண்டும்' என்றும் சொல்லுகிறபடியால் உன்னைக் காட்டிக் கொடுக்க எனக்கு மனம் வரவில்லை. உன்னிடம் மேலும் பேசிக் கொண்டு நிற்கவும் எனக்கு இஷ்டம் இல்லை. வந்த வழியாக உடனே புறப்பட்டுப் போய் விடு!"

இவ்விதம் இளவரசி மிகக் கடுமையாகச் செய்து கொண்ட குரலில் அதிகாரத் தொனியில் கூறினாள். அந்தப்புரத்துக்குள் அடைந்து கிடக்கும் உலகம் அறியாத இளம் பெண் ஆனபோதிலும், அவளுடைய அறிவையும் பேச்சுத் திறமையையும் கண்டு உலகநாதத் தேவன் அதிசயித்தான். முன்னே பேச்சு நடந்தபடி இத்தகைய பெண்ணரசியை மணந்து கொள்ளும் பாக்கியம் தனக்கு இல்லாமற் போயிற்றே என்ற ஏக்கம் அப்படிப்பட்ட ஆபத்தான சமயத்தில் அவன் மனதில் தோன்றியது.

அவன் ஒன்றும் பேசாமல் யோசனையில் ஆழ்ந்திருப்பதைப் பார்த்த இள

வரசி, "இப்படியே நின்று கொண்டிருந்தால் என்ன அர்த்தம்? நீயாகப் போகப்போகிறாயா? இல்லாவிட்டால் காவற்காரர்களையும் வேட்டை நாய்களையும் கூப்பிட்டுத்தான் ஆக வேண்டுமா?" என்று கேட்டாள்.

அவள் சொல்லுகிறபடி உடனே போய்விடலாம் என்று முதலில் இளவரசன் நினைத்தான். ஆனால் அவனுடைய உடம்பின் களைப்பும் கால்களின் சலிப்பும் தலையின் கிறுகிறுப்பும் அதற்குக் குறுக்கே நின்றன. முன் எப்போதையும் விட அதிக இரக்கமான குரலில், "அம்மணி! இராத்திரி முழுவதும் கண் விழித்தும் வழி நடந்தும் சொல்ல முடியாத களைப்பை அடைந்திருக்கிறேன். இந்த நிலையில் ஓர் அடிகூட என்னால் எடுத்து வைக்க முடியாது. இச்சமயம் நீ என்னை வெளியே அனுப்புவதும் எதிரிகளிடம் என்னைப் பிடித்துக் கொடுப்பதும் ஒன்றுதான். இந்த நந்தவனத்தில் எங்கேயாவது ஒரு இருண்ட மூலையில் சிறிது நேரம் படுத்துத் தூங்கிவிட்டுப் போகிறேன். என்னால் உனக்கு ஒருவிதத் தொந்தரவும் நேராது; சத்தியமாய்ச் சொல்லுகிறேன். ஒருவேளை நான் அகப்பட்டுக் கொண்டால் அதன் பலனை அநுபவிக்கிறேன். என்னை நீ பார்த்ததாகவோ பேசியதாகவோ காட்டிக் கொள்ள வேண்டாம். நானும் சொல்ல மாட்டேன். உண்மையில், இவ்வளவு அதிகாலை நேரத்தில் நந்தவனத்தில் பூப்பறிக்க நீ வருவாய் என்று யார் நினைக்க முடியும்?"

இளவரசி மாணிக்கவல்லி சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்து நின்றாள். பரிதாபமான முகத்துடன் கனிந்த குரலில் பேசிய அந்த ராஜகுமாரன் விஷயத்தில் அவள் மனம் பெரிதும் இரக்கமடைந்திருந்தது. விதியை வெல்லுவதென்பது யாருக்கும் இயலாத காரியமல்லவா?

"அப்படியானால் நான் சொல்லுகிறபடி கேள். இந்த வஸந்த மண்டபத்திலேயே படுத்துக் கொண்டு தூங்கு. இன்றைக்கு இங்கே யாரும் வரமாட்டார்கள். வந்தால், என்னுடைய வேலைக்காரிதான் வருவாள். அவள் வராதபடி நான் பார்த்துக் கொள்கிறேன். ஆனால் தூக்கம் விழித்து எழுந்ததும் நீ பாட்டுக்குப் போய் விடக் கூடாது. என்னிடம் சொல்லிக் கொண்டுதான் போக வேண்டும். அபாயம் ஒன்றும் இல்லாத தக்க சமயம் பார்த்து உன்னை நான் அனுப்பி வைக்கிறேன். நான் மறுபடி வரும் வரையில் நீ இங்கேயே இருக்க வேண்டும்" என்று மாணிக்கவல்லி கண்டிப்பான அதிகார தோரணையில் கூறினாள்.

"அப்படியே ஆகட்டும், அம்மணி! ரொம்ப வந்தனம்" என்றான் இளவரசன். அவ்விடத்தை விட்டு மாணிக்கவல்லி திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு சென்று மறைந்ததும், உலகநாதத் தேவன் வஸந்த மண்டபத்தின் ஓரத்தில் கையைத் தலையணையாக வைத்துக் கொண்டு படுத்தான். சிறிது நேரத்துக்கெல்லாம் ஆழ்ந்த நித்திரையின் வசமானான்.

(தொடரும்)

## யாருக்கு உதவி?




காப்பாற்றப் போனவர் காப்பாற்றப்படுகிறார்!

# சமரச ஆலயம்

''அரியும் சிவனும் ஒண்ணு; அறியாதவன் வாயில் மண்ணு'' என்னும் பாமரப் பழமொழி சங்கரநயினார் கோயிலில் உள்ள அற்புதமான ஆலயத்தில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அங்கே கர்ப்பக் கிரஹத்தில் உள்ள மூல விக்கிரகம் ஒரு பாதி சிவனாகவும் ஒரு பாதி மகாவிஷ்ணுவாகவும் காட்சி அளித்துச் சமய சமரசத்தின் பெருமைக்கு அறிகுறியாய் விளங்குகிறது. அத்தகைய புண்ணியத் திருக்கோயில் சமீபத்தில் சகல ஹிந்துக்களுக்கும் திறந்து விடப்பட்டது.











SANKARANAYINARKOVIL

சங்கரன்கோயில் ஆலயத் திறப்பு வைபவத்துக்கு விஜயம் செய்த மந்திரி கோடி ரெட்டி, ஹிந்து மத பரிபாலன போர்டு தலைவர் ஸ்ரீ சின்னையாப் பிள்ளை ஆகியவர்களையும், சுதந்திர கர்ஜனை செய்து திருநெல்வேலியைத் தட்டி எழுப்பிய ஸ்ரீ சோமயாஜுலு, புரட்சி வீரர் ஸ்ரீ மேகநாதன் ஆகியவர்களை இந்தக் கூட்டமான படத்திலே காணலாம். ஆலயத் திறப்புக்காகப் பெருமுயற்சி செய்து வெற்றியடைந்த ஜில்லா காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீ மீனாட்சிசுந்தரமும் அவருடைய சகாக்களும் மேலே தனித்தனியே விளங்குகிறார்கள்.




# அரைக்கீரை விதைத் தைலம்

●

அரைக்கீரை விதையுடன் 72-வித சரக்குகளும், அநேக பச்சிலைகளும் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. இத் தைலத்தை வாரம் இரு முறை தேய்த்து ஸ்நானம் செய்து வர சிரசைப் பற்றிய சகல வியாதிகளைப் போக்குவதுடன் கண் மறைப்பு முதலிய கண் சம்பந்தமான வியாதிகளையும், காது குத்தல், காதில் சீழ் வருதல் முதலிய வியாதிகளையும் கண்டிக்கக் கூடியது.

தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர். அண்டு கோ., கும்பகோணம்

●

மதராஸ் விடி ஏஜண்டுகள் :

புஷ்பவனம் ஸ்டோர்ஸ், பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

கோயமுத்தூருக்கும், பாலக்காடுக்கும் சோல் ஏஜண்டு :

B. பாலபட்டாபி, வைசியாள் தெரு, கோயமுத்தூர்

---

# குழந்தைகளின் ஈரல் குலைக்கட்டி வியாதிகளுக்கு ஜம்மியின் "லிவர்க்யூர்"

## அறிவிப்பு

எங்கள் பிரபல ஈரல், குலைக்கட்டி வைத்திய நிபுணர் கீழ்க்கண்ட இடங்களுக்கு விஜயம் செய்கிறார். ஈரல், குலைக்கட்டி சம்பந்தமான வியாதிகளுக்கு அவரிடம் நேரில் கீழ்க்கண்ட நேரப்படி சந்தித்து ஆலோசனை செய்து கொள்ளலாம்.

| | | |
|---|---|---|
| அரியலூர் | 24—1—47<br>மாலை 2 மணி முதல் 5 வரை | பி. எஸ். கிருஷ்ணசாமி அய்யர், ஜெனரல் மர்ச்சண்ட். |
| கரூர் | 25—1—47<br>மாலை 2 மணி முதல் 5 வரை | சென்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ். |
| புதுக்கோட்டை | 27—1—47 | ஹோட்டல் மானேஜரவர். |
| காரைக்குடி | 28, 29—1—47 | ப. வி. & ஸன்ஸ் டிராவலர்ஸ் ரூம்ஸ். |
| தேவகோட்டை | 30—1—47 | ஸ்ரீ மீனாக்ஷி ஸ்டோர்ஸ். |
| சிவகங்கை | 31—1—47<br>மாலை 3-30 மணி முதல் 6 வரை | மீனாக்ஷி & கோ., கெமிஸ்ட்ஸ். |

குறிப்பு :—புதுக்கோட்டை, காரைக்குடி, தேவகோட்டை முதலிய இடங்களில் காலை 9 மணி முதல் 11 வரை. மாலை 3 மணி முதல் 5 வரை ஆலோசனை செய்து கொள்ளலாம்.

## ஜம்மி வெங்கட்ரமணய்யா & ஸன்ஸ்

மதராஸ் :: :: திருச்சிறுப்பள்ளி

# படித்துப் பார்!

## 1. அப்பாவும் மகனும்

## 2. குழந்தை எப்படிப் பிறக்கிறது?

[ஆசிரியர்: பெ. திரிகூடசுந்தரம் பிள்ளை எம்.ஏ., பி.எல்., பிரசுரம்: தமிழ்ப்பண்ணை, தியாகராயநகர், சென்னை; விலை முறையே: ரூ. 2—8—0; ரூ. 1—12—0.

ஈ தலைகீழாக எப்படி நடக்கிறது என்று உங்களுக்குத் தெரியுமா?

நாய் ஏன் சுற்றிச் சுற்றி வந்து படுத்துக் கொள்கிறது என்கிற விஷயத்தை யாராவது தெரிந்து கொண்டிருக்கிறீர்களா?

இம்மாதிரியான விஷயங்களுக் கெல்லாம் காரணம் என்னவென்பது நமக்குத் தெரியாது; தெரிந்து கொள்ளவும் நாம் விரும்புவதில்லை. ஈயானது தலைகீழாக மாத்திரம் அல்ல, மல்லாந்து படுத்துக் கொண்டே நடந்த போதிலும் நாம் அதைக் கொஞ்சமும் பொருட்படுத்தப் போவதில்லை. நாய் சுற்றிச் சுற்றி வந்து படுப்பதற்குப் பதிலாக, படுத்துக் கொண்டே சுற்றினாலும் நமக்குக் கவலையில்லை. ஆனால், சிறு குழந்தைகள் அப்படியல்ல. அவர்கள் ஒவ்வொரு விஷயத்தையும் கூர்மையாகக் கவனிக்கிறார்கள். இந்தப் பிரபஞ்சத்தின் ஒவ்வொரு பொருளையும் அதிசயத்துடனே பார்க்கிறார்கள். ஒவ்வொரு காரியத்துக்கும் காரணம் என்னவென்பதைத் தெரிந்து கொள்ள ஆசைப்படுகிறார்கள். ஆகவே, ஒவ்வொன்றுக்கும் நம்மிடம் வந்து, "அது ஏன் அப்படி?" "இது ஏன் இப்படி?" என்று கேட்டு நச்சரிக்கிறார்கள். ஆனால், நாமோ அவர்களுடைய கேள்விகளைப் பெரிய தொந்தரவாகக் கருதுகிறோம். சில சமயம் அவர்களுடைய கன்னத்தில் அறைந்து, "அது அப்படித்தான்; இது இப்படித்தான். வாயை மூடிக் கொண்டு பேசாமல் இரு!" என்று சொல்லி விடுகிறோம்.

குழந்தைகளின் ஆவல் பூர்த்தியாவதற்கும் அவர்களுடைய தொந்தரவிலிருந்து நாம் மீள்வதற்கும் நல்ல காலம் இப்போது பிறந்திருக்கிறது. ஸ்ரீ பெ. திரிகூடசுந்தரம் பிள்ளை குழந்தை உலகத்துக்கு மிகச் சிறந்த உபகாரம் செய்திருக்கிறார். சிறு குழந்தைகளின் மனதிலே இயற்கையாகத் தோன்றும் கேள்விகளையெல்லாம் தொகுத்து அவைகளுக்குப் பதிலும் சொல்லியிருக்கிறார்.

"அப்பாவும் மகனும்" என்ற பெயருடன் வெளிவந்திருக்கும் அழகிய புத்தகத்துக்கு "கல்கி" ஆசிரியர் முன்னுரை எழுதியிருக்கிறார். "அப்பா! முன்னுரை என்றால் என்ன?" என்ற கேள்வியுடனே முன்னுரை ஆரம்பமாகிறது. ஸ்ரீ திரிகூடசுந்தரம் பிள்ளை அவர்களின் தியாகம், தேசத் தொண்டு ஆகியவைகளைப் பற்றியும், இந்தப் புத்தகத்தின் மூலம் எவ்வளவு பரம முக்கியமான திருப்பணியை அவர் செய்திருக்கிறார் என்பது பற்றியும் ஆறு பக்கம் விரிவாக எழுதிவிட்டு, நூலாசிரியருக்குக் "குழந்தைகளைப் பெற்ற தாய் தகப்பன்மார்களின் சார்பாக மனமார்ந்த நன்றி" தெரிவித்திருக்கிறார்.

* * *

பொது விஷயங்களைப் பற்றியும் உலகத்தின் பல்வேறு அற்புதங்களைப் பற்றியும் மேற்படி நூலில் குழந்தைகளுக்கு எடுத்துக் கூறிய ஆசிரியர் திரிகூட சுந்தரம், உலகத்திலுள்ள எல்லா அற்புதங்களுக்குள்ளேயும் மிகப் பெரிய அற்புதமாகிய சிருஷ்டி தத்துவத்தைப் பற்றிக் "குழந்தை எப்படிப் பிறக்கிறது?" என்ற நூலிலே எழுதியிருக்கிறார்.

"இல் வாழ்க்கையின் மர்மங்கள்" என்பது போன்ற மிருக உணர்ச்சியைத் தூண்டும் ஆபாச நூல் அல்ல இது. விஞ்ஞான ஆராய்ச்சி முறையில் குழந்தைகள் உள்பட பெரியவர்கள் அனைவரும் படித்து அறிவை வளர்த்துக் கொள்ளும் முறையில் இந்த மிக முக்கியமான விஷயத்தைக் கையாண்டிருக்கிறார். தாவர வர்க்கங்களின் பிறப்பிலேயிருந்து தொடங்கி பட்சிகள் மிருகங்கள் மனிதர்கள் ஆகிய எல்லா வர்க்கங்களும் ஜனனமாகும் முறையைத் தூய்மையான முறையில் சொல்லியிருக்கிறார். குழந்தைகளைப் பெற்று வளர்க்கும் விஷயத்தில் மிருகங்களைப் போல மனிதர்கள் நடந்து கொள்ளக் கூடாது என்றும், அறிவை உபயோகித்து நல்ல குழந்தைகளைப் பெறும் வழியைத் தேட வேண்டும் என்றும் சிறந்த முறையில் வற்புறுத்திச் சொல்லியிருக்கிறார்.




இரண்டு நூல்களிலும் ஆசிரியர் மிக எளிமையான தமிழ் நடையைக் கையாண்டிருப்பதுடன் மிகவும் சிக்கலான பௌதிக, ரசாயன, தாவர வர்க்க தத்துவங்களையெல்லாம் குழந்தைகளும் எளிதில் புரிந்து கொள்ளும்படி தெளிவாகவும் ரஸமாகக் கதை சொல்வது போலும் எழுதியிருப்பதைப் பெரிதும் பாராட்ட வேண்டும். தமிழ் மக்களின் அறிவு வளர்ச்சிக்கும் தமிழ்மொழியின் ஆக்கத்துக்கும் இந்த நூல்களின் மூலம் ஸ்ரீ திரிகூட சுந்தரம் பிள்ளை அவர்கள் மிகச் சிறந்த தொண்டு செய்திருக்கிறார் என்பதில் ஐயமில்லை.

# இரண்டு கடிதங்கள்

ஸோமாஸ்

"அம்மாவுக்கு அநேக நமஸ்காரம். இங்கே எனக்கு யாரும் துணையில்லை. இப்பொழுது நாங்கள் குடியிருக்கும் வீடு ரொம்ப சௌகரியமாயிருக்கிறது. இருபத்திநாலு மணி நேரமும் குழாயில் ஜலம் வருகிறது. துணி துவைப்பதற்கு 'அவர்' ஆள் போட்டிருக்கிறார். நீ வந்து வீட்டைப் பார்த்தால் ரொம்ப சந்தோஷப்படுவாய். நாலு மாதம் இருந்துவிட்டுப் போகலாம். மாமியார், நாத்தனார் என்கிற பிடுங்கலும் அதிர்ஷ்டவசமாக இங்கே இல்லை.

உன் அன்புள்ள
விமலா."

தன் மனைவி விமலா தபாலில் போடும்படி கொடுத்த இந்தக் கடிதத்தைப் படித்ததும் நாகராஜனுக்குக் கோபம் கோபமாக வந்தது. அவனும் பரபரவென்று தன் தாயாருக்கு — நான்கு மாதங்கள் வந்து இருந்துவிட்டுப் போகும்படி ஒரு கடிதம் எழுதினான்.

விமலாவுக்கு ஒரே ஆனந்தமாயிருந்தது. தான் தனிக் குடித்தனம் செய்வதைப் பார்த்து அவள் தாயார் மகிழவேண்டும் என்னும் அவளது வெகு நாளைய அவா பூர்த்தியாகப் போகிறதல்லவா?

நாகராஜனும் ஆனந்த சாகரத்தில் அமிழ்ந்து திணறிக்கொண்டிருந்தான். காரணம் விமலாவின் கனவு வீணாகப் போகிறதல்லவா?

முதலில் விமலாவின் தாயார் வந்தாள். விமலா சந்தோஷ சிகரத்தில் ஏறி நர்த்தனம் புரிய ஆரம்பித்தாள். நாலைந்து நாட்களுக்குப் பிறகு நாகராஜனின் தாயார் வந்தாள். விமலாவுக்கு வேதனை தாங்கவில்லை. இப்பொழுது அவன் துக்க சிகரத்தில் ஏறவேண்டி வந்தது.

இரண்டு வாரங்கள் அமைதியாய்ச் சென்றன. பிறகு கொஞ்சங் கொஞ்சமாக விமலாவின் தாயாருக்கும் நாகராஜனின் தாயாருக்கும் சிறு சிறு விஷயங்களில் அபிப்பிராய பேதம் ஏற்பட ஆரம்பித்தது.

"நான் இங்கே வந்தது பிசகு. பெண்ணைக் கொடுத்தவர்கள் என்றால் என்றைக்கும் இளப்பந்தான்!" என்றாள் விமலாவின் தாயார் அலுப்புடன்.

"பெண்ணைப் பெற்றவர்களை யார் இங்கே எளனமாய்ப் பேசுகிறார்கள்? அவரவர்கள் இருக்கிறபடி இருந்தால் ஒரு வம்பும் இல்லை. என் பிள்ளை வீட்டில் இருக்க எனக்கு உரிமையில்லையா?" என்றாள் நாகராஜனின் தாயார்.

நாகராஜனுக்கு இது தலைவேதனையாய்ப் போய்விட்டது. தன் தாயாரைக் கண்டிக்கலாம் என்றால் அவள் பெரிய போர் தொடுத்துச் சாபங் கொடுக்க ஆரம்பிப்பாள். விமலாவின் தாயாரைக் கண்டித்துச் சமாதானத்தை நிலைநாட்டலாம் என்றால் பெரிய விபரீதம் நிகழ்ந்துவிடும். அதாவது விமலாவும் போரில் குதித்துவிடுவாள்.

நாகராஜன் செய்வது இன்னது என்று புரியாமல் — முடிச்சுமாறியிடம் 'மணி பர்ஸை'ப் பறிகொடுத்த பஸ் பிரயாணி மாதிரி விழித்தான்.

அன்று நாகராஜனின் தங்கையிடமிருந்து கடிதம் வந்திருந்தது. அவள் தன் அம்மாவுக்கு எழுதியிருந்தாள்:

"நமஸ்காரம். இங்கே இத்தனை நாட்களாக மாமியார் வந்திருந்தாள். போதாக் குறைக்கு என் நாத்தனார் வேறு குழந்தைப் பட்டாளங்களுடன் வந்திருந்தாள். இவர்கள் இரண்டு பேரும் எப்போது போவார்கள் என்று ஆகிவிட்டது. இப்பொழுது ஒரு பிடுங்கலும் இல்லை. நீ வந்து இரண்டொரு மாதங்கள் இருந்துவிட்டுப் போயேன். உடனே பதில்.

ருக்மிணி."

இந்தக் கடிதத்தைப் படித்ததும் நாகராஜனுக்கு வியப்பு தாங்க முடியவில்லை. "ருக்மிணி தன் தாயாரைப் பார்க்க வேண்டும், தன்னிடம் அழைத்துக் கொஞ்ச நாள் வைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்ற பிரியத்தினால்தானே இப்படி எழுதியிருக்கிறாள்? விமலா மாத்திரம் என்ன தவறு செய்துவிட்டாள்? அவளும் பெண்தானே!" என்று எண்ணினான்.

அவ்வளவுதான்; நாகராஜனின் தாயார் மறுநாளே தன்னுடைய பெண் வீட்டுக்குப் போனாள்; விமலாவின் தாயாரும் தன் ஊருக்குப் போனாள்; யுத்தமும் முடிந்தது.

# மந்திரியின் தந்திரம்

ராஜலக்ஷ்மி

ஓர் ஊரில் ஓர் அரசன் இருந்தான். அவனுக்கு ஒரு மதி மந்திரி இருந்தான். அவன் சாதுர்யமாகப் பேசுவதில் மிகவும் கெட்டிக்காரன்.

ஒரு நாள் அரசன் மந்திரியைப் பார்த்து, "உலகத்தில் ஏன் ஏழைகள் கஷ்டப் படுகிறார்கள்?" என்று கேட்டான்.

"பணக்காரர்கள் அதிகமிருப்பதால் ஏழைகள் கஷ்டப்படுகிறார்கள். பணக்காரர்கள் இல்லாவிட்டால் அவர்களிடமிருக்கும் பணமெல்லாம் ஏழைகளைச் சேரும். அவர்களுடைய கஷ்டமும் தீர்ந்துவிடும்" என்று மந்திரி பதிலளித்தான்.

மறுநாள் அரசன் மந்திரியைப் பார்த்து, "நம் நாட்டிலிருக்கும் ஏழைகளெல்லாம் எப்படியாவது சௌகரியமாக வாழ வேண்டுமென்று நான் தீர்மானித்து விட்டேன். ஆகவே, பிரபுக்களையெல்லாம் உடனே தூக்கிலிட வேண்டும். அதற்கு வேண்டிய ஏற்பாடு செய்யுங்கள்!" என்று கட்டளையிட்டான்.



இந்தச் செய்தியைக் கேட்டதும் பிரபுக்கள் எல்லோரும் மந்திரியிடம் வந்து, "நீங்கள்தான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்" என்று கேட்டுக் கொண்டார்கள். மந்திரியும் சிறிது நேரம் யோசித்துவிட்டு, "ஆகட்டும்; நீங்கள் போய் வாருங்கள்" என்று சமாதானம் சொன்னான்.

இரண்டு நாள் கழித்து அவரவர்களுக்காக ஏற்படுத்தியிருந்த தூக்கு மரங்களை ஒவ்வொன்றாக அரசனுக்குக் காட்டிக் கொண்டே வந்தான் மதி மந்திரி. அதில் ஒன்று வெள்ளியில் செய்யப்பட்டிருந்தது; மற்றொன்று தங்கத்தினாலானது. அரசன் அந்த இரண்டு கம்பங்களையும் பார்த்ததும், "இந்தக் கம்பங்கள் யாருக்கு?" என்று கேட்டான்.

"வெள்ளிக் கம்பம் எனக்கு: தங்கக் கம்பம் உங்களுக்கு! எல்லாப் பிரபுக்களையும் போல் நாமும் மரத்தாலான கழுவில் ஏறுவதில் என்ன கௌரவமிருக்கிறது?" என்றான் மந்திரி.

உண்மையை உணர்ந்த அரசன், "அடடா! என்ன தவறு செய்து விட்டோம்?" என்று எண்ணியவனாய், "பிரபுக்களையெல்லாம் உடனே விடுதலை செய்து விடுங்கள்; தூக்கிலிட வேண்டாம்!" என்று கட்டளையிட்டு விட்டான்.

தப்பிப் பிழைத்த பிரபுக்கள் எல்லோரும் மந்திரியை வாழ்த்தினார்கள்.

# இரு நண்பர்கள்

ஆசிரியர்: சுதர்சன் மொழிபெயர்ப்பு: ரா. வீழிநாதன்

## நந்தகிசோர் சொல்லுகிறான்:

### 8. சந்திப்பு

நான் வித்யாசங்கரைப் பற்றி எண்ணியதெல்லாம் தப்பு. அவனைக் கெட்டவன் என்று கருதினேனே, நான் பாவி! அவனைத் தெய்வம் என்றல்லவா கொண்டாட வேண்டும்? அவனைப் பற்றி என்னவெல்லாமோ இல்லாதது பொல்லாதது எல்லாம் சொல்லித் திரிந்துவிட்டேன். அவனை மட்டம் தட்டி அவமானப் படுத்த முயன்றேன். என் வாயில் வந்தபடியெல்லாம் ஏசினேன். அவனைக் கவிழ்க்க எத்தனையோ சூழ்ச்சிகள் செய்தேன். இவற்றையெல்லாம் பொருட்படுத்தாமல், வீடு தேடி என்னைப் பார்க்க வந்த அவனுடன் நான் சரியாக முகம் கொடுத்துக் கூடப் பேசாமல் அக்கிரமம் புரிந்தேன். ஆயினும் அவன் அதே பழைய நண்பனாகவே — குற்றங் குறைகளையெல்லாம் ஒரு பொருட்டாக மதியாமல் மன்னித்து விடும் உயர்ந்த சுபாவம் படைத்த அதே பழைய நண்பனாகவே இருக்கிறான். என் மீது கொஞ்சம்கூட அவன் வெறுப்பைக் காட்டியதே இல்லை. என்னைத் தூஷித்துப் பிறரிடம் ஒரு வார்த்தைகூடச் சொன்னதும் இல்லை. நான் செய்யும் குற்றங்களையெல்லாம் மனத்தில் வைத்துக் கொள்ளாமல் மன்னித்து விடுவதென்றே அவன் தீர்மானித்திருக்கிறான். "வேண்டாத பெண்டாட்டி கைபட்டால் குற்றம், கால் பட்டால் குற்றம்" என்பார்களே, அதே போல அவன் செய்யும் நன்மைகள் கூட எனக்குத் தீமைகளாகவேதான் படுகின்றன. 'மஞ்சள் காமாலை' வந்தவனுக்கு எதுவுமே மஞ்சளாகத்தான் தோன்றுமாம். கண் வலியால் கஷ்டப்படுபவனுக்கு வெளிச்சம் கண்களைக் கூசும்படிச் செய்து விடும் அல்லவா? அதே போல, அவன் செய்யும் ஒவ்வொரு காரியங்களும் எனக்கு வெறுப்பைத்தான் அளிக்கின்றன.

ரூபாணியை அடைய முடியாது என்ற ஏக்கத்தினால் அவன் மீது எனக்கு எரிச்சல் உண்டாகிறது. "வித்யாசங்கரின் கழுத்தைத் திருகிப் போட்டு விட்டால் என்ன?" என்று கூட எண்ணுகிறேன். ஒரு காலத்திலே அவனுடைய முகத்தில் சிறிது துயரச் சாயை படர்ந்திருந்தால்கூடப் போதும், என் உள்ளத்தில் எல்லையற்ற வேதனை தோன்றியதுண்டு. ஆனால் இப்பொழுதோ, "அவன் இறந்துவிட்டான்!" என்று யாராவது வந்து சொன்னால் போதும், எல்லையற்ற மகிழ்ச்சி ஏற்பட்டுவிடும். ஆனால் அவன் தலையில் சாவு என்பது எழுதப்பட்டிருந்தால்தானே?

அன்றொரு நாள் மாலை நேரம். நான் கோமதி யாற்றங்கரையில் ஒரு மணல் திட்டில் அமர்ந்து என் வாழ்வைப் பற்றி எண்ணமிடலானேன். ஒரு நோயாளி — பெரிய பெரிய டாக்டர்களால்கூட 'இனி இவன் பிழைக்க மாட்டான்' என்று நம்பிக்கை இழந்து கைவிடப்பட்ட நோயாளி— 'இந்த டாக்டர்களுக்கு என்ன தெரியும்? எல்லாம் தெரிந்தவர்கள் போலப் பேசி விடுகிறார்களே! படைத்த பிரமன் என் தலையில், 'உன் ஆயுசு கெட்டி' என்று எழுதி யிருந்தானானால் நான் ஏன் பிழைத்துவிட மாட்டேன்?' என்று எண்ணுகிறான் அல்லவா? அதே போல நானும், 'இருள் அடர்ந்த என் பாக்கியம் ஒளி பெற்றாலும் பெறலாம் அல்லவா?' என்று சிந்திக்கலானேன்.

இந்த நம்பிக்கை இருக்கிறதே, இதை — நகர முடியாதபடி அடித்துப் போட்ட பிறகும், 'இங்கிருந்து உயிர் தப்பி எப்படியாவது ஓடிவிட மாட்டோமா?' என்ற ஆசையில் துடியாய்த் துடிக்கும் பாம்புக்குச் சமானமாகச் சொல்லலாம். அவ்வாறு அடிபட்ட பாம்பு, வெய்யிலில் கிடந்தால் சூடு தாங்காமல் உடலை நெளித்துக் கொடுத்துக் கொள்கிறது. யாராவது சிறு குச்சியைக் கொண்டு துன்புறுத்தப் போனாலோ, அல்லது அதனிடம் சேஷ்டை செய்தாலோ, தலையைத் தூக்கித் தூக்கிச் சீற ஆரம்பித்து விடுகிறது. அதே போலத்தான் இந்த நம்பிக்கை என்ற பாம்பும்! இதை நசுக்கி எவ்வளவு ஆழத்தில் வேண்டுமானாலும் மூடித் தள்ளிவிடுங்கள், அப்பொழுதும் அது சாவதில்லை. கும்பிருட்டில் ஆழ்த்தி விடுங்கள்; அப்பொழுதும் இது தலைதூக்கி விடுகிறது. இது எங்கிருந்து தான் இப்படிச் சாகாவரம் பெற்றுக் கொண்டு வந்ததோ, தெரியவில்லை!

இவ்வாறு நான் சிந்தனையில் ஆழ்ந்திருந்த சமயத்தில் பின்னாலிருந்து யாரோ என் தோள்மீது கை வைத்தார்கள். நான் திடுக்கிட்டுத் தலை நிமிர்ந்தேன். என் எதிரில் வித்யாசங்கர் புன்முறுவல் பூத்த வண்ணம் நின்றுகொண்டிருந்தான்.

எனக்கு ஒரே வியப்பாக இருந்தது. அவன் சிறிதும் தயக்கமின்றி என்னோடு பேச முன் வருவான் என்று நான் எதிர்பார்க்கவே யில்லை. நானோ அவனை என் வாழ்வைச் சீர்குலைக்க வந்த கோடரிக் காம்பாகக் கருதினேன். அவனும் என்னை அப்படித்தானே எண்ணியிருக்க வேண்டும்? ஆனால் அவனோ கொஞ்சங்கூடக் கோபம், தாபம், சங்கோசம் எதுவுமின்றி மலர்ந்த முகத்துடன் என் எதிரில் நின்று கொண்டிருந்தான்.

மனத்துள் ஒரு கிலி. எனக்குப் பேசவே நா எழவில்லை. ஒரு அசட்டுச் சிரிப்புச் சிரித்து வரவேற்கலாம் என்று எண்ணினேன்; ஆனால் சிரிப்பு வந்தால் தானே? ஏதாவது பேசுவோமே என்றால், என்ன பேசுவது? எப்படிப் பேச்சைத் தொடங்குவது என்று புரியாமல் விழித்தேன். ஆனால் நல்ல வேளை, வித்யாசங்கரே என் கஷ்டத்தைப் போக்கி விட்டான். "ஏன் அப்பா, நீ என்னிடம் எவ்வளவு நாள்தான் கோபித்துக் கொண்டிருப்பாய்? நானும் உன் மாதிரி இருப்பதென்று எவ்வளவோ பாடுபட்டுப் பார்க்கிறேன். என்னால் முடியவே இல்லையே! இந்தச் சக்தி எங்கிருந்து வந்தது?" என்று அவனாகவே பேச்சை ஆரம்பித்தான்.

நான் ஒரு வரட்டுச் சிரிப்புச் சிரித்து, "உனக்கு ஏன் அப்பா, என்னைப் பற்றி வீண் கவலை? ரூபாராணி மனம் கோணாமல் நடந்து கொள். அவள் இல்லாத காலத்தில் தான் நான் உனக்கு வேண்டியிருந்தது. இனிமேல் என்னைப் பற்றி உனக்கு என்ன அக்கறை?" என்றேன்.

"என்மேல் ஏன் இப்படி யெல்லாம் வீண் சந்தேகம் கொள்கிறாய்? அவளுக்காக நான் உன்னைத் தியாகம் செய்ய மாட்டவே மாட்டேன். அவசியம் ஏற்



தகப்பனார் :—போதுமே, நிறுத்து! உன் பாட்டை மனுஷனால் கேட்க முடியாது. சற்று வாயை மூடிக்கொள்!




பெண் :—அப்பா, இதோ பார்! எங்க பள்ளிக்கூடத்தில் பாட்டுப் போட்டியில் எனக்கு முதல் பரிசு கிடைத்திருக்கிறது.



"என்னுங்க! நீங்க ஒரு வாட்ச் வாங்கிக் கிட்டா உங்களுக்குச் சௌகரியமா இருக்குமே!"

"வாட்ச் வாங்குறதுன்னு அதுக்குப் பணம், டயம் எல்லாம் வரவேண்டாமா?"

"நீங்க வாட்ச வாங்காமே உங்களுக்கு டயம் எப்படிங்க தெரியும்?"

---

பட்டால் உன் பொருட்டு அவளைத் தியாகம் செய்துவிடத் தயங்க மாட்டேன்!" என்றான் அவன்.

"ஆகாத காரியத்தைப் பற்றிப் பேசி என்ன பயன்? இப்படி யெல்லாம் வாயால் சொல்லலாமே தவிர, காரியத்தில் காட்ட முடியுமா, என்ன?" என்றேன்.

"என் நந்தகிசோர்! என்னை அவ்வளவு நீசனாகவா நீ எண்ணுகிறாய்?" என்று பரிவுடன் என்னைப் பார்த்தவாறே வித்யாசங்கர் கேட்டான்.

"நான் சொல்வானேன்? எனக்கு இப்படி யெல்லாம் உன்னைப் பற்றிச் சொல்ல உரிமைதான் ஏது?"

"உன் முகம் கோணாமல் இருக்க நான் எப்படி நடந்துகொள்ள வேண்டும்? அதை யாவது சொல். அப்படி நடக்க முயற்சிக்கிறேன்."

"எனக்கு உன்மீது ஒன்றும் கோபமே இல்லையே!"

"உண்மையாகவா?" என்று சிரித்தவாறு வித்யாசங்கர் கேட்டான்.

"இல்லை; நான் பொய்தான் சொல்கிறேன். ஹரிச்சந்திரன் உங்கள் வீட்டுக் கொல்லையாலேதானே போனான்? நீ மட்டும்தான் உண்மை விளம்பி; மற்றவர்கள் எல்லாரும் பொய்யர்கள்!" என்று சற்றுக் கோபமாகவே நான் பதில் சொன்னேன்.

"அப்படியானால் இது கோபமில்லையா?"

"கோபம் என்றுதான் வைத்துக் கொள்ளேன்! கோபித்துக் கொள்வது கோபித்துக் கொள்ளாதது என்பதெல்லாம் என் இஷ்டம். இதில் பிறர் தலையிடுவானேன்?"

"என்னவோ, என் மனம் கேட்கவில்லை. நீ வருத்தப்படுவதைக் கண்டால் என் மனமும் வேதனையுறுகிறது. நான் என்ன செய்வது?"

"தங்கள் கருணைக்குப் பாத்திரனாக முடிந்ததில் எனக்குப் பரம சந்தோஷம்!"

"எனக்குத் தெரிந்த வரையில் நீ என் மீது கோபம் அடைவதற்குக் காரணம் இந்த ரூபாராணிதான் என்று எண்ணுகிறேன். நான் எண்ணுவது சரிதானே?"

"சரி யென்றே வைத்துக்கொள். அதனால் ஆகக்கூடியது ......?"

"உண்மையாகச் சொல்கிறேன், நந்தகிசோர்! அவளிடம், 'உன் மீது எனக்குப் பிரியம் இல்லை, நான் உன்னைக் காதலிக்கப் போவதும் இல்லை!' என்று நான் தெளிவாகச் சொல்லிவிட்டேன். என் அறிவுக்கு எட்டியவரை இதைவிட அதிகமாக நான் செய்வதற்கு ஒன்றும் இல்லை. இப்பொழுதாவது உனக்கு என்மீதுள்ள சந்தேகம் நீங்குமா? என்னைப் பழையபடி நண்பனாகவே கருதுவாயா?" என்றான் அவன்.

இதைக் கேட்டு நான் ஒரேயடியாக ஸ்தம்பித்து விட்டேன். வித்யாசங்கர் எனக்காக இவ்வளவு செய்ய முன் வருவான் என்ற நம்பிக்கையே எனக்கு இதுவரை உதிக்கவில்லை. துர்ப்பாக்கியத்தோடு கூடிய இந்த மாலை யிருட்டில் நம்பிக்கை என்னும் அகல் விளக்கு வெகு தூரத்துக்கப்பால் மினுக்கிக் கொண்டிருப்பது போல எனக்குத் தோன்றியது. அது உண்மையில் அகல் விளக்குத்தானோ, அல்லது என் விதி என்னை ஏமாற்றப் புரியும் சதியோ?

வித்யாசங்கர் மறுபடியும், "நீ அவளைக் காதலிக்கிறாய் என்பதைத் தெளிவாகச் சொல்லி யிருந்தாயானால் விஷயத்தை இவ்வளவு தூரம் மிஞ்ச விட்டிருக்க மாட்டேன். முன்னாலிருந்தே என்மீது அவளுக்குப் பற்றுதல் ஏற்படாத வகையில் நடந்து கொண்டிருக்க நான் முயற்சி செய்திருப்பேன். ஆனால் நீயோ என்னிடம் ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. மனத்துக்குள்ளேயே எண்ணி எண்ணிப் புழுங்கிக் கொண்டிருந்து விட்டாய். உன்

அசட்டுத்தனத்தை நான் என்னவென்று சொல்வேன்?" என்று வெகு பிரியத்துடன் அவன் என்னைக் கடிந்து கொண்டான்.

என் கண்களில் நீர் சுரந்து விட்டது. நான் கேட்கவேண்டும் என்று ஆசைப் பட்டுக் கொண்டிருந்ததை இன்று என் காதுகளால் கேட்டேன். 'உன் பொருட்டு ரூபாராணியை வெகு அலட்சிய மாகத் தியாகம் செய்ய முன் வந்திருக்கும் இவன் ஒரு வீர புருஷன்' என்று கூறியது என் மனம். என்னிடத்தில் இம்மாதிரித் தைரியம் ஏது? நான் வித்யாசங்கருக்கு முன்னிலையில் மிக அற்பன்; நீசன்; கல் நெஞ்சன்! என் உள்ளத்தில் வருத்தம் ஏற்படுவதற்குப் பதிலாகத் தனி மகிழ்ச்சி ஏற்பட்டது. ஆற்றில் மூழ்கித் தத்தளிப் பவனுக்கோ கரை தட்டுப்பட்டு விட்டது; ஆனால் அவனைக் காப்பாற்ற இறங்கிய வனோ, சுழலில் சிக்கித் தத்தளிக்க ஆரம் பித்து விட்டான்!

சிறிது நேரத்துக்கெல்லாம் நாங்கள் ஒருவரை யொருவர் கட்டித் தழுவிய வண்ணம் கண்ணீர் சொரிந்துகொண் டிருந்தோம். எங்களைச் சுற்றிலும் மாலை இருட்டும் அமைதியும் நிலவி விட்டது. கோமதி யாற்றின் வெறி கொண்ட அலைகள் துள்ளிக் குதித்துக் கொண்டும், ஆடிப் பாடிக்கொண்டும் தங்கள் தங்கள் காதலனைச் சந்திப்பதற்காக வெகு வேகமாக முன்னேறிச் சென்று கொண்டிருந்தன.

## 9. ரயில் பிரயாணம்

வித்யாசங்கர் தான் சொன்னபடியே செய்து காண்பித்து விட்டான். இப் பொழுதெல்லாம் அவன் ரூபாராணியைத் தலைநிமிர்ந்து கூடப் பார்ப்பதில்லை. அநேக தடவை ரூபாராணி என் எதிரிலேயே அவ னுடன் பேச முயன்றிருக்கிறாள். ஆனால் அவன் அவளிடம் முகங்கொடுத்துப் பேச வேயே இல்லை. "என் பெயரைக் கெடுக்க என் கங்கணம் கட்டிக் கொண்டிருக் கிறாய்?" என்று அவன் ரூபாராணியிடம் கேட்டுக் கொண்டிருந்ததை நான் என் காதுகளாலேயே ஒரு தடவை கேட்டேன். வெறுப்பும் திரஸ்காரமும் நிரம்பிய இந்த வார்த்தைகளைக் கேட்டு ரூபாராணியின் முகம் அக்கினிப் பிழம்பாகச் சிவந்து விட்டது. வித்யாசங்கரின் முகமும் களை யிழந்து வெளிறிவிட்டது. இவற்றை யெல்லாம் என் கண்களாலேயே கண்ட நான், 'அவன் என் பொருட்டுத்தான் தன் மனதை இப்படியெல்லாம் அடக்கி ஒடுக்கி ஆளுகிறான்' என்பதை நன்கு உணர்ந்து கொண்டேன்.

ஒரு தடவை வித்யாசங்கர் ஒரு பைய னிடம் பேனாக் கத்தி கேட்டான். அவ னிடம் பேனாக் கத்தி இல்லை. அப்பொழுது அருகிலிருந்த ரூபாராணி தன் கத்தியை எடுத்து அவனிடம் கொடுக்கப் போனாள். அவளுடைய செய்கை, சமாதான உடன் படிக்கைக்கு ஒரு வேண்டுகோள் போலத் தோன்றியது. ஆனால் வித்யா சங்கரோ அதைக் கவனிக்காதவன்போல் சமாதான உடன்படிக்கையை நிராகரித்து விட்டு, வேறொரு பையனை நாடிச் சென்று விட்டான். 'அதற்குள் நான் இவ்வளவு கெட்டவனாய் விட்டேனா?' என்று அவள் மனம் நொந்து கொண்டாளோ, என்னவோ! அதற்குப் பிறகு அன்று பூராவும் இருவருடைய முகமும் மிகவும் வாட்ட முற்றுத்தான் காணப்பட்டது. இதை யெல்லாம் பார்த்து நான் மிகவும் மனம் புழுங்கினேன். 'இது மகா பாவம்' என்று என் மனம் இரண்டொரு தடவை என்னை இடித்துக் கூறியது. 'அவர்கள் இருவரும் ஒருவரை யொருவர் மனமாரக் காதலிக்கின்றனர். அவர்களுடைய காதலைக் குலைக்க உனக்கு ஏது உரிமை?' என்று என் மனத்தில் ஒரு கேள்வியும் எழுந்தது. 'ஆகா! வித்யாசங்கர் எவ்வளவு உதார குணம் படைத்தவன்! அவனை நான் ஏன் பின்பற்றக் கூடாது? நான் தைரியமாக விட்டுக் கொடுக்க முன்



போலீஸ்:—என்னப்பா, ஏன் அவரைப் போட்டு அப்படி உருட்டறே?

வழிப்போக்கன்:—இவரு டாக்டருங்க! மயக்கம் அடிக்கக் கீளே உளுந்திருக் காரு! அதுக்கு என்ன பண்ணணும்னு கேட்கத்தான் அவரை எழுப்பறேன்!"

வந்தால் பாழடைந்த அந்த இரு உள்ளங்களும் புத்துயிர் பெற்று விடாதா?' என்ற எண்ணம் என் மனதில் அடிக்கடி எழுவது உண்டு. ஆனால் அந்த வீராவேசமும், தியாக உணர்ச்சியும் 'பிறந்ததுமே மரித்து விடும் குழந்தைகள்' போல எழுந்ததுமே அடங்கிவிட்டன. கரிய இருள் சூழ்ந்த இரவில் பிரகாசித்து விட்டு மறைந்து விடும் மின்மினிப் பூச்சிகளால் ஏதாவது பிரயோசனம் உண்டா? அவை பிரகாசித்து மறைந்ததும் இருள் இன்னும் அதிகமாகவும் பயங்கரமானதாகவும்தானே தோன்றுகிறது! அதேபோல என் உள்ளத்தில் எழும் உணர்ச்சிகளும் ஒன்றுக்குமே பிரயோசனப்படாமல் போயின.

கடைசியில் எனக்கு ஒரு சந்தர்ப்பம் கிட்டியது. அன்று இரவு வேளை. நான் கான்பூரிலிருந்து லக்னோவுக்குத் திரும்பிக் கொண்டிருந்தேன். தற்செயலாகக் கான்பூர் ரயில்வே ஸ்டேஷனில் நான் ரூபாராணியைக் கண்டேன். அப்பொழுது என் உள்ளத்தில் எழுந்த மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது. நான் தரையில் கால்கூடப் பாவாமல் அவளை நெருங்கி, ''ஹலோ! எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்டேன்.

பத்திரிகையில் கவனம் செலுத்தியிருந்த அவள் என்னை நிமிர்ந்து பார்த்தாள். பிறகு பத்திரிகையை மடித்து வைத்துவிட்டு, ''ஹலோ, நீங்களா? என்ன அபூர்வமாயிருக்கிறதே! எங்கே இப்படி வந்திருக்கிறீர்கள்? நான் ஒரு தோழியைப் பார்க்க வந்திருந்தேன். லக்னோவுக்குத்தான் திரும்பிப் போகிறேன். ஆமாம், நீங்கள் எங்கே போகிறீர்கள்?'' என்று இளநகை புரிந்த வண்ணம் விசாரித்தாள்.

''நானும் லக்னோவுக்குத்தான் போகிறேன். தனியாக உட்கார்ந்து கொண்டு போகவேண்டுமே என்று எண்ணிக் கொண்டிருந்தேன். நல்ல வேளை! பேச்சுத் துணைக்கு நீங்கள் அகப்பட்டீர்கள்!''

ரூபாராணி தன் கைக் கடிகாரத்தை ஒரு முறை பார்த்துவிட்டு, ''நானும் இந்தப் படிப்பு வாசனையே இல்லாத பெண்களுடன் உட்கார்ந்துகொண்டு போகவேண்டி வந்து விட்டதே என்று வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன். நல்லவேளை, நீங்கள் அகப்பட்டீர்கள். உங்களுடன் உட்கார்ந்தால் அரசியல், இலக்கியம் முதலிய உபயோகமான விஷயங்களைப் பற்றி விவாதிக்கலாம்; பொழுதும் போவது தெரியாமல் போய்விடும். ஆமாம், நீங்கள் 'ஸெகண்ட் கிளா'ஸில் அல்லவா போவீர்கள்? நான் 'இண்டர் டிக்கெட்'தானே வாங்கி இருக்கிறேன்?'' என்றாள்.

கிடைத்தற்கரிய சந்தர்ப்பம் வாய்த்திருக்கும்பொழுது, அதைக் கை நழுவ விடுவதற்கு நான் என்ன அசடனா? ''உங்களுடன் 'இண்ட'ரில் போவதே 'ஸெகண்ட் கிளா'ஸுக்குச் சமம்தானே?'' என்றேன் புன்முறுவலுடன்.

ரூபாராணி என் உள்ளத்தை அறிந்து கொள்வதற்காகத்தானோ, அல்லது என்னுடைய பதிலின் பொருளை அறிந்து கொள்வதற்காகத்தானோ தெரியவில்லை— என்னைத் தன் கரிய விழிகளால் ஊன்றிக் கவனித்தாள். (தொடரும்)



## கண்ணீர் எதற்கு?

சீனர்களுக்குத் தங்கள் பெற்றோரிடம் அளவு கடந்த பக்தியும் மரியாதையும் உண்டு. இதை விளக்குவதற்காகத் தற்போது சீன அயல் நாட்டு மந்திரியாக இருக்கும் வெல்லிங்டன் கூ, கொஞ்ச நாளைக்கு முன்னால் லண்டனில் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் ஒரு ரசமான சம்பவத்தைக் கூறினார்.

ஒரு முறை நூறு வயதுள்ள ஒரு சீனக் கிழவர் எழுபத்தைந்து வயதுள்ள தம்முடைய மகனை முதுகில் தடியால் அடித்தார். மகனுடைய கண்ணிலிருந்து பொல பொலவென்று கண்ணீர் வழிந்தது. தந்தை இதைப் பார்த்துத் திடுக்கிட்டுப் போனார். அவர் இதற்கு முன் பலமுறை தம்முடைய மகனைத் தடியால் அடித்திருக்கிறார். அப்போதெல்லாம் மகன் ஒருமுறைகூட அழுததில்லை, கவலைப்பட்டதுமில்லை. இப்போது அழுவதற்கு மாத்திரம் காரணம் என்ன? அவர் மகனைப் பார்த்து அமைதியாக, ''அப்பா, ஏன் அழுகிறாய்?'' என்று கேட்டார்.

அதற்குக் குமாரன், ''ஒன்றும் இல்லை, அப்பா! முன்பெல்லாம் நீங்கள் தடியால் அடித்தால், அடி பலமாக உறைக்கும்; இப்போது நீங்கள் அடித்தால் அது அடி மாதிரியாகவே தோன்றவில்லை. உங்களுக்குப் பலஹீனம் அதிகமாகி விட்டதை நினைத்ததும் எனக்குக் கண்ணீர் வந்து விட்டது!'' என்றாராம்.

# சுலோசனா

பகீரதன்



சுலோசனா எப்பொழுது பார்த்தாலும் குமாருடன் ஊரைச் சுற்றி வருவது டாக்டர் சாம்பமூர்த்திக்குக் கொஞ்சங் கூடப் பிடிப்பதில்லை.

ஏனெனில், வருங்காலத்தில் அவள் ஒரு புகழ் பெற்ற டாக்டராக விளங்கப் போகிறாள் என்ற நம்பிக்கை டாக்டர் சாம்பமூர்த்திக்கு இருந்தது. சுலோசனாவின் குணமும் அழகும் ஒரு புறமிருக்க, அவளுடைய திறமையும் அவள் தன்னுடைய வேலையில் காட்டும் அபார உற்சாகமும் சாம்பமூர்த்தியை நாளடைவில் சுலோசனாவுக்கு அடிமையாக்கி விட்டன.

2

அன்று சுலோசனாவும் பிரேம்குமாரும் பீச்சிலே உலாவிக் கொண்டிருந்தனர். தூரத்தில் யாரோ ஒரு வாலிபனும் இள நங்கையும் பிரேம்குமாரைப் பார்த்துக் கூப்பிட்டனர். அவர்கள் கூப்பிடுவது காதில் விழுந்தும் கவனிக்காதவன் போல் பிரேம்குமார் சுலோசனாவுடன் உலாவிக் கொண்டிருந்தான். இந்த மாதிரி அவன் கவனிக்காதவன் போல் நடந்து கொள்வதின் காரணம் சுலோசனாவுக்குத் தெரியுமா, என்ன? கள்ளங் கபடமற்ற அவள் "உங்களை யாரோ கூப்பிடுகிறார்களே!" என்று சொல்லிக் கொண்டே அந்த வாலிபனும் காரிமணியும் இருந்த திக்கைச் சுட்டிக் காட்டினாள்.

வெகு சிரமத்துடன் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, பிரேம்குமார் அவர்கள் இருக்குமிடத்திற்குச் சென்றான். அங்கே பிரேம்குமாரும் அந்த இள நங்கையும் பழகிக் கொண்டதைப் பார்க்கும்போது சுலோசனாவுக்கு உலகமே சுழலுவதுபோல இருந்தது. ஆனாலும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல் குமாருடனேயே திரும்பி வந்தாள். வழியில் அவள் குமாருடன் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அதற்குப் பதிலாக அவள் தன்னுடன் வேலை பார்க்கும் டாக்டர் சாம்பமூர்த்தியின் சிறந்த குணங்களைப் பற்றியெல்லாம் சிந்தித்துக் கொண்டே வந்தாள்.

"சுலோசனா! நீ இந்த டாக்டர் வேலைக்கு ஒரு முழுக்குப் போட்டுவிட மாட்டாயா? நாம் இருவரும் கல்யாணத்தைப் பண்ணிக் கொண்டு எங்கேயாவது சுகமாக இருக்க மாட்டோமா?" என்றான் குமார்.

சுலோசனா வேண்டா வெறுப்புடன் "இன்றிரவு அதைப் பற்றி ஒரு முடிவுக்கு வந்து விடுகிறேன்!" என்றாள்.

"சரி, மீண்டும் நான் உன்னை நாளைக்குச் சந்திக்கிறேன்" என்று சொல்லிவிட்டுக் குமார் அவளை விட்டுப் பிரிந்தான்.

வீடு வந்து சேர்ந்த சுலோசனா, தனக்காகச் சாம்பமூர்த்தி காத்துக் கொண்டிருப்பதைக் கண்டாள்.

"என்ன சுலோசனா! இன்று என் ஆஸ்பத்திரிக்கு வரவில்லை? நீ வராததால் எனக்குத்தான் ரொம்பவும் கஷ்டமாகப் போய்விட்டது" என்றான் சாம்பமூர்த்தி அன்பும் ஆதரவும் கலந்த குரலில்.

"இன்று மட்டும் என்ன? இனிமேல் நான் ஆஸ்பத்திரி பக்கமே வரப் போவதில்லை!" என்று சொல்லிக் கொண்டே ஒரு கவரை எடுத்து அவன் கையில் கொடுத்தாள் சுலோசனா.



# டாக்டர்

ஆஸ்பத்திரியில் உள்ள ஆப்பரேஷன் அறையில் மௌனம் குடிகொண்டிருந்தது. டாக்டர் சுலோசனா ஆப்பரேஷன் செய்து கொண்டிருந்தாள். அந்தச் சமயத்தில் வியாதியஸ்தரின் நாடியைப் பரிசோதித்துக் கொண்டிருந்த இன்னொரு டாக்டர், "நாடி மிகவும் பலஹீனமாகி விட்டது!" என்று பரபரப்புடன் சொன்னார்.

இதைக் கேட்ட டாக்டர் சுலோசனாவின் கை சிறிது தயங்கிற்று. ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுவிட்டு மறுபடியும் வேகமாக ஆப்பரேஷன் செய்ய ஆரம்பித்தாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம், "எல்லாம் தீர்ந்து விட்டது!" என்று வருத்தம் தோய்ந்த குரல் காதில் விழுந்தவுடன் "அவ்வளவுதான்; நம்மால் ஆவது என்ன?" என்று சுலோசனா மனச் சோர்வுடன் சொல்லிக் கொண்டே ஆப்பரேஷன் ஆயுதங்களைக் கீழே வைத்தாள்.

"ஆப்பரேஷன் செய்வதற்கு எந்த டாக்டருமே தைரியமாக முன் வராத இந்தக் கேஸைத் தாங்கள் கவனிக்க முன் வந்ததே மிகவும் பாராட்டக் கூடிய விஷயம்" என்றார் சுலோசனாவின் உதவி டாக்டர் சாம்பமூர்த்தி.

அவள் ஓர் அசட்டுச் சிரிப்புச் சிரித்துக் கொண்டே ஆப்பரேஷன் அறையை விட்டு வெளியேறினாள். அதே சமயத்தில் அழகாக 'டிரஸ்' பண்ணிக் கொண்டிருந்த ஒரு வாலிபன் மலர்ந்த முகத்துடன் அவளை நோக்கி வந்து கொண்டிருந்தான்.

"அந்த வியாதியஸ்தரைக் காப்பாற்ற முடியாமல் போய்விட்டதே!" என்ற கவலையுடன் வந்த சுலோசனாவுக்கு அந்த வாலிபனைப் பார்த்ததும் தூக்கிவாரிப் போட்டது.

"அதற்குள்ளே வந்து விட்டாயே? ரொம்ப நாழியாகும் என்றல்லவா நினைத்தேன்" என்றான் அந்த வாலிபன்.

நெற்றியில் சுருண்டு தொங்கிக் கொண்டிருந்த தலைமயிரைக் கோதி விட்டுக் கொண்டே, "குமார்! என் மனசு இன்று ஒரு நிலையில்லை. நான் இன்று ஒரு பெரிய காரியத்தைச் சாதித்துவிடப் போவதாக நினைத்துக் கொண்டிருந்தேன். எல்லா டாக்டர்களும் 'முடியாது' என்று தட்டிக் கழித்த ஒரு வியாதியஸ்தரை என்னால் காப்பாற்றிவிட முடியும் என்று மனப்பால் குடித்துக்கொண்டிருந்தேன். கடைசியில் அந்த வியாதியஸ்தரை என்னால் காப்பாற்ற முடியவில்லை. அதனால் இன்று எனக்கு ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது!" என்றாள் சுலோசனா.

"நான் அப்பொழுதே சொல்லவில்லையா? பெண்கள் டாக்டராக வரக் கூடாது என்று!" என்றான் அந்த வாலிபன்.

* * *

பிரேம்குமார் மீது டாக்டர் சுலோசனாவுக்கு அபாரப் பிரேமை. "இந்த வைத்தியப் பிழைப்பு பெண்களுக்கு ஏற்றதல்ல. உடல் சிரமம், மனக் கஷ்டம் எல்லாம் பெண்களால் தாங்கவே முடியாது. பெண்கள் வைத்தியம், யுத்தம் போன்றவைகளில் ஆண்களுடன் போட்டியே போடக் கூடாது. எல்லாப் பெண்களையும் போல் நீயும் நல்ல கணவனைப் பார்த்துக் கலியாணத்தைச் செய்து கொண்டு சந்தோஷமாக இருக்க வேண்டும்" என்று அவளிடம் அடிக்கடி சொல்லி வந்தான் குமார்.

அதைப் பார்த்த சாம்பமூர்த்திக்குத் தூக்கிவாரிப் போட்டது. "நீ ஏன் ராஜ்குமாரைச் செய்யவேண்டும்?" என்று படபடப்புடன் கேட்டான்.

"எல்லாப் பெண்களையும் போல நானும் கலியாணம் செய்துகொண்டு சந்தோஷமாக வாழப் போகிறேன்! என்ன பிழைப்பு வேண்டிக் கிடக்கிறது? விடிந்து எழுந்திருந்தால் ஒரே வியாதியஸ்தரையும் கஷ்டத்தையும் பார்க்க எனக்குச் சகிக்கவில்லை. பார்க்கப் போனால் பெண்கள் குழந்தைகளைப் பெற்று வளர்த்துப் பாதுகாக்கத்தான் பிறந்திருக்கிறார்கள் என்று எனக்குத் தோன்றுகிறது" என்றாள்.

"பிள்ளைகளைப் பெற்று வளர்க்கத்தான் எத்தனையோ பெண்கள் இருக்கிறார்களே! அவர்களுக்கு உதவி செய்வதற்காகவாவது நீ இந்த வைத்தியத் தொழில் செய்வது நல்லதல்லவா?" என்று சொல்லிக் கொண்டே அவள் கொடுத்த ராஜ்குமாக் கடிதத்தைக் கிழித்துப் போட்டு விட்டான் சாம்பமூர்த்தி.

3

மாலை வேளை. கைலாசனுவின் மனசு தனக்கு எதிரே ஓயாமல் அலைந்து கொண்டிருக்கும் கடல் அலைகளைப் போல அலைந்துகொண்டிருந்தது. இந்தச் சமயத்தில் "ஹலோ! குமார்!" என்ற குரல் கேட்டு அவனுடன் இருந்த குமார் திரும்பிப் பார்த்தான். யாரோ தூரத்திலிருந்து கொண்டு குமாரைக் கூப்பிட்டனர். "இதோ வருகிறேன்!" என்று கைலாசனுவினிடம் சொல்லிவிட்டுத் தன் கையில் வைத்திருந்த புஸ்தகத்தைக் கீழே வைத்து விட்டுப் போனான் குமார்.

குமாரும் அவனுடைய நண்பர்களும் நீண்ட நேரமாகப் பேசிக்கொண்டிருந்தனர். தனிமையில் இருப்பதைவிட இந்தப் புஸ்தகத்தையாவது படிக்கலாம் என்று எண்ணிச் கைலாசனு, குமார் வைத்துவிட்டுப் போன புஸ்தகத்தை எடுத்துப் புரட்டிக்கொண்டிருந்தான். அதிலிருந்து ஒரு கடிதம் கீழே விழுந்தது.

"அன்புள்ள குமாருக்கு.

நீ என்னைக் கலியாணம் செய்து கொள்வதாக என் பெற்றோரிடம் சொல்லி விட்டுக் கைலாசனுவுடன் சுற்றிக் கொண்டிருக்கிறாய்! ஆகவே, நான் உன்னைக் கலியாணம் செய்து கொள்ள முடியாது என்று என் தந்தையிடம் சொல்லி விட்டேன். என்னைப்போல் உன் வாய் ஜாலத்தில் ஏமாந்தவர்கள் எத்தனை பேரோ!

சாவித்திரி."

இதைப் படித்தவுடன் கைலாசனுவின் தலையில் ஒரு பெரிய இடி விழுந்ததுபோலிருந்தது. அவனுக்கு என்ன செய்வதென்றே புரியவில்லை. பேசாமல் அந்தக் கடிதத்தைப் புஸ்தகத்துக்குள்ளேயே வைத்துவிட்டு வாய் மூடி மௌனியாகச் சிறிது நேரம் உட்கார்ந்திருந்தான். குமார் வந்த பிறகுகூட அவன் அவனுடன் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை.

*   *   *

அன்று ஆஸ்பத்திரியில் தன் மனக் கஷ்டத்தை மறைப்பதற்காகக் கைலாசனு வேலையில் மிகவும் கவனம் செலுத்தினான். அது சாம்பமூர்த்திக்கு ஆச்சரியமாக இருந்தது. "எத்தனையோ மாதங்களுக்குப் பிறகு இன்றுதான், நீ ரொம்பக் கவலையுடன் வியாதியஸ்தர்களைக் கவனிக்கிறாய். இதே மாதிரி நீ இத்தனை நாளும் இருந்திருந்தாயானால் வியாதியஸ்தர்களில் பெரும்பாலோர் எப்பொழுதோ குணமடைந்து வீட்டுக்குச் சென்றிருப்பார்கள்!" என்று சந்தோஷத்துடன் சொன்னான்.

"இனி என் வாழ்நாள் முழுவதும் இப்படியே இருப்பேன்; நீங்கள் கவலைப்பட வேண்டாம்" என்றான் கைலாசனு.

"கலியாணம் செய்துகொண்டு சந்தோஷமாக இருக்கப் போவதாகச் சொல்லிக் கொண்டிருந்தாயே!"

"ஆமாம்; கலியாணமும் செய்து கொண்டு வைத்தியத் தொழிலையும் பார்த்துக் கொள்ளப் போகிறேன்."

"உன் கணவரும் அதற்குச் சம்மதிக்க வேண்டுமே?"

"என் கணவரும்தான் ஒரு டாக்டராயிற்றே! சம்மதிக்காமல் இருப்பாரா?"

"டாக்டரா! அது யார்?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான் சாம்பமூர்த்தி.

அதற்குப் பதில் சொல்லாமல் மௌனம் சாதித்தான் கைலாசனு.

டாக்டர் தொழிலுக்கு வந்த பிறகு கைலாசனு நாணித் தலை குனிந்ததைச் சாம்பமூர்த்தி அப்போதுதான் முதல் தடவையாகப் பார்த்தான்!

# காலக்ஷேபம்

### இருக்காது!

"காணாமற் போன உங்கள் குழந்தையைக் கண்டெடுத்து வைத்திருக்கிறோம்."

"அப்படியா? அவன் என்ன செய்து கொண்டிருக்கிறான்?"

"அவன் ஒன்றும் செய்யவில்லை. சும்மாத் தான் சாதுவாக உட்கார்ந்து கொண்டிருக்கிறான்!"

"அப்படியானால் குழந்தை என்னுடையதாக இருக்காது!"

★

### இரண்டும் ஒன்றே!

ராமு:—பந்தயம் என்ன சொல்லுகிறாய்? நான் என் தலையை வேண்டுமானாலும் வைக்கிறேன்!......

கிட்டு:—நானும் தயார்! என் மணிபர்ஸை வைக்கிறேன்.......

ராமு:—அதுதான் காலியாயிற்றே!

கிட்டு:—உன் தலை மட்டும் என்ன வாழ்ந்தது? அதுவும் அப்படித்தானே?

★

### விசேஷமில்லை!

அம்புஜம்:—ஏன் அம்மாமி, அடுத்த வீட்டுக்குத் தினம் ஐந்து தடவை பால்காரன் வருகிறானே, என்ன விசேஷமோ தெரியவில்லையே!

அம்மாமி:—இது தெரியாதா? அவர்கள் வீட்டில் ஒரு விசேஷமும் இல்லை. பால் விடுவதற்காக அவன் ஒரு தரம் வருகிறான். அப்புறம் வருவதெல்லாம் பால் பணம் வாங்குவதற்காக!

★

### நியாயந்தானே?

நபர்:—என்ன ஜோஸ்யர்வாள்! நேற்றைக்கு மூன்று ரூபாய் கொடுத்து விட்டுக் கேட்ட போது இந்த ஜாதகனுக்கு வயது 35 என்று சொன்னீர்கள். இன்றைக்கு ஐந்து ரூபாய் கொடுத்துக் கேட்டால் வயது 75 என்கிறீர்களே, இரண்டிலே எது சரி?

ஜோஸ்யர்:—நான் தான் முன்பே சொல்லியிருக்கிறேனே, நபர்வாள்! கொஞ்சமாகக் கொடுத்தால் சுருக்கிச் சொல்லுவேன், தாராளமாகக் கொடுத்தால் அதிகமாகச் சொல்லுவேன் என்று!

### சாப்பிட முடியுமா?

சாப்பிடுபவர்:—என்னப்பா, இதுவா ஓரணா? ரொம்பத் துளியூண்டு இருக்கிறதே இட்டிலி?

ஹோட்டல் சர்வர்:—முதலில் நீங்கள் அதை முழுக்க சாப்பிட முடியுமா என்று பாருங்களேன், அப்புறம் பார்க்கலாம்!

★

### நல்ல அடையாளம்!

இன்ஸ்பெக்டர்:—இந்த ஆள் உம்முடைய வீட்டில் திருடினதாகச் சொல்லுகிறீர்களே, இவனிடமிருந்து எடுத்திருக்கும் சாமான்களில் உங்களுடையது ஏதாவது இருக்கிறதா என்று பார்த்துச் சொல்லுங்கள்!

வீட்டுக்காரர்:—இந்தக் கைக்குட்டைதான் என்னுடையது போல் இருக்கிறது!

இன்ஸ்பெக்டர்:—அதைக் கொண்டு மட்டும் குற்றம் சாட்டிவிட முடியுமா? என்னிடம் கூடத்தான் அதேமாதிரி ஒரு கைக் குட்டை இருக்கிறது.

வீட்டுக்காரர்:—ஆமாம், ஸார்! அதேமாதிரி என்னிடம் இரண்டு கைக் குட்டைகள் காணாமற் போயிருக்கின்றன!

★

### திருந்தவில்லை!

அவர்:—பத்து வருஷம் எழுதின பிறகுதான் எனக்குக் கற்பனா சக்தியில்லை என்பதைக் கண்டு கொண்டேன்!



இவர்:—ஓஹோ! அப்படியானால் எழுதுவதை உடனே நிறுத்திக்கொண்டு விட்டீர்களாக்கும்!

அவர்:—நன்றாய்ச் சொன்னீர்கள்! அது எப்படி முடியும்? அதற்குள்ளேதான் என் பெயர் பிரசித்தியடைந்து விட்டதே!

# எப்படி முடியும்?

பி. எக்ஸ் ஆர்.

மாலை வேளை. ஜன்னல் வழியாக வெளியே பார்த்தான் பாலு. 'தக தக' வென்றிருந்தன, இயற்கையில் காணப் பட்ட பொருள்களெல்லாம். அதெல்லாம் அவனுக்கு எவ்வித ஆறுதலும் அளிக்க வில்லை. குமுறிக் கொண்டிருந்த அவ னுடைய மனதுக்குச் சாந்தி கொடுக்கக் கூடிய பொருள் உலகத்தில் எதுவும் இல்லையென்றே நினைத்தான் அவன். மனை வியை இழந்ததினால் உடைபட்டிருந்த அவனுடைய உள்ளத்தில் அலை அலை யாகப் பல எண்ணங்கள் தோன்றிக் கொண்டிருந்தன. கையில் வைத்திருந்த கடிதத்தை மறுபடியும் அவன் ஒரு தடவை வாசித்துப் பார்த்தான்.

அன்புள்ள அத்தானுக்கு,

தங்களுடைய நிலைமையை நினைந்து நான் மிகவும் வருந்துகிறேன். தங்களுக்கு எவ்வித ஆறுதலும் கூறுவதற்கு நான் தகுதியற்றவள். தாங்கள் எதிர்பாராத இந்தத் துன்பத்தைச் சமாளித்துக் கொள்வீர்கள் என்றே நினைக் கிறேன்.

இனிமேலாவது ஏழை என் மீது இரக்கம் காண்பிப்பீர்கள் என்பது என் நம்பிக்கை. தங்களுடைய இரண்டு குழந்தைகளையும் நினைக்கும்போது நான் மிகவும் துக்கப்படு கிறேன். என்னை இப்போதாவது தங்கள் வாழ்க்கைத் துணைவியாக ஏற்றுக் கொண் டால் என்னால் இயன்ற பணியை நான் தங்க ளுக்குச் செய்ய முடியும்.

தங்கள் அன்புள்ள

ராதா.

ராதா பாலுவின் தாய் மாமன் மகள். அவனும் அவளும் பத்தாம் வகுப்பு வரை ஒரே கலாசாலையில் படித்தவர்கள்.



ராதாவின்மீது பாலு அளவு கடந்த அன்புள்ளவனாய் இருந்தான். அவளும் அவனை ஒருநாள் பார்க்காவிடில் மிகவும் திணறிக் கொண்டிருப்பாள். அவர்கள் ஒருவரை யொருவர் மணந்து கொள்வ தாகவும் வாக்களித்துக் கொண்டார்கள்.

பாலு பி. ஏ. பரிக்ஷை எழுதி விட்டுத் தன் ஊருக்கு வந்திருந்தான். ராதாவைத் தன் மனைவியாகக் கொள்ளும் காலம் நெருங்கிக் கொண்டிருப்பதாக அவன் நினைத்தான். ஆனால் தெய்வத்தின் வழி வேறு விதமாக இருந்தது. பாலுவின் தகப்பனாருக்கும் ராதாவின் தகப்பனாருக் கும் ஏதோ ஒரு சிறு விஷயத்தில் மனஸ் தாபம் ஏற்படவே பாலுவின் மனக் கோட்டை ஆயிரமாயிரந் துண்டுகளாக உடைந்து போயிற்று.

குடும்ப மானத்தை விட்டுக் கொடுக்க விரும்பாத பாலுவின் தகப்பனார், பக்கத்து ஊரில் இருந்த மாலினி என்ற பெண்ணை அவனுக்குத் திருமணம் செய்து வைத்தார். அப்போது தன் தகப்பனார் எண்ணத்துக்கு விரோதமாக அவன் எது வும் செய்யச் சக்தியற்றவனாய் இருந் தான். ஆகவே, பாலுவை நம்பியிருந்த ராதா அவனால் கைவிடப்பட்டாள்.

★

ஐந்து வருடங்கள் பறந்தோடின. தன் இரண்டு குழந்தைகளுடனும் மனைவியுடனும் உல்லாசமாகத் தன் காலத்தைக் கழித்து வந்தான் பாலு. ஆனாலும் தனக்கு விவாகமே வேண்டாம் என்று ஒரே பிடிவாதமாக இருந்து வந்த ராதாவை அவன் சமயா சமயங் களில் நினைத்து வருந்துவதும் உண்டு. "பெண்கள் வைராக்கியம் உள்ளவர்கள் தான்!" என்று தனக்குத் தானே அவன் சொல்லிக் கொள்வான். ஆனால், அவ னுடைய வாழ்க்கையில் ஏற்படவிருந்த பெரும் புயலைப்பற்றி அவன் கொஞ்ச மேனும் நினைக்கவில்லை. எப்படி நினைத் திருக்க முடியும்?

பாலுவுக்குக் கல்யாணமான ஆறுவது வருஷத்தில், மாலினி திடீரென்று விஷக் காய்ச்சலால் உயிர் துறந்தாள். உலகமே இருண்டுவிட்டதாக நினைத்தான் பாலு. அவ்விருட்டில் சற்றே வெளிச்சம் கொடுப்பதுபோல் இருந்தது மேலே குறிப்பிட்ட ராதாவின் கடிதம்.

அந்தக் கடிதத்தின்படி அவன் ராதாவை இரண்டாந்தாரமாக சீக்கிரமே மணந்து கொண்டான்.

ஆறு மாதங்கள் கடந்தன. அன்று ஞாயிற்றுக் கிழமை. ஈஸிசேரில் சாய்ந்து கொண்டிருந்தான் பாலு. அவனுடைய குழந்தைகள் கந்தாவும், ராமுவும் ராதாவின் பக்கத்தில் விளையாடிக் கொண்டிருந்தனர். அவள் அப்பொழுது மிகவும் கவனத்துடன் ஏதோ பின்னல் வேலை செய்து கொண்டிருந்தாள். இளையவனான ராமு, "அம்மா!" என்று அழைத்துக் கொண்டே அவள் கையில் வைத்திருந்த நூல் உருண்டையைப் பற்றி இழுத்தான். அவ்வளவுதான்; ராதாவுக்குக் கோபம் ஏனோ பொத்துக்கொண்டு வந்து விட்டது. "சனியன், எங்கேயாவது தொலைந்து போ!" என்று சொல்லி அவன் கன்னத்தில் 'பளார்' என்று ஓர் அறையும் கொடுத்து விட்டாள்.




குழந்தையின் முகம் மாறிவிட்டது. அவன் விம்மி விம்மி அழுதுகொண்டே பக்கத்து அறையிலிருந்த தன் அப்பாவிடம் சென்றான். பாலுவும் இதைக் கவனித்துக் கொண்டேயிருந்தான். அவனுக்கு ஆத்திரம் பொங்கிற்று. ஒரு அற்ப விஷயத்துக்காக ஒன்று மறியாத பச்சிளங் குழந்தையை எதற்காக இப்படி அடிக்க வேண்டும் என்று ராதாவின் பக்கம் வந்தான். அவன் கண்களில் நீர் நிறைந்திருந்தது. ராதா ஒன்றும் தெரியாதவள் போல் பின்னிக் கொண்டிருந்தாள். ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு தனக்கு எதிராகச் சுவரில் மாட்டியிருந்த மாலினியின் படத்தைப் பார்த்தான் பாலு. அவளுடைய இரக்கம் நிறைந்த கண்கள் அவனைப் பார்த்தன.

"மாற்றாந் தாயின் கொடுமையினின்றும் என் கண்மணிகள் இரண்டையும் காப்பாற்றுவீர்களா?" என்று அவை அவனைக் கேட்பதுபோல் இருந்தது. தன் கன்னத்தில் வழிந்தோடிய இரண்டு கண்ணீர்த் துளிகளைக் கையினால் துடைத்து விட்டுக் கொண்டே, ராமுவைத் தூக்கித் தோளின்மேல் போட்டுக் கொண்டு பாலு தெருப்பக்கம் சென்றான்.

---

## சங்கீத ரஸிகர்



"என்ன, இப்படி நடுத் தூக்கத்திலே கையைத் தட்டிண்டு கத்தறேள்? ஏதாவது துர்ச் சொப்பனம் கண்டீர்களா?"



"இல்லே, இல்லே. சங்கீதக் கச்சேரியில் வித்வான் மேல் பஞ்சமம் பிடித்த மாதிரி சொப்பனம் கண்டேன்!"

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk, Madras

# தி இந்தியன் பாங்க்
## லிமிடெட்

★

தலைமை ஆபீஸ் :
" இந்தியன் பாங்க் பில்டிங்ஸ் "
வடக்கு பீச் ரோடு, மதராஸ்

★

லோகல் ஆபீஸ்கள் :
எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு, மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

★

வழங்கி வாக்களிக்கப்பட்ட
மூலதனம் ரூ. 71,10,900
செலுத்தப்பட்ட
மூலதனம் ரூ. 51,67,608
ரிஸர்வ் நிதி ரூ. 61,50,000

★

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

**N. கோபால அய்யர்**
செக்ரடரி

# தாமதம் செய்யாதீர்கள் !




# பிஸ்மாக்
## உட்கொள்ளுங்கள் !

உத்ஸாகக் குறைவாகவும் வாழ்க்கையிலேயே வெறுப்பும் கொண்டவராகவும் இருந்தால் பிஸ்மாக் (பைஸுரேடட் மக்னீஷியா) உட்கொள்ளுங்கள். அது வயிற்றில் ஏற்படும் எல்லா சங்கடங்களையும், அஜீரணத்தையும், சோம்பலையும், இன்னும் எல்லா வயிற்றுக் கோளாறுகளையும் நீக்க வல்லது.

உபயோகமற்ற போலிகளை வாங்காதீர்கள்! பிஸ்மாக் உட்கொண்டு நல்ல ஜீரண சக்தி அடையுங்கள்.




மாத்திரையாகவும் பௌடராகவும் எல்லா மருந்துக் கடைகளிலும் கிடைக்கும்.

Sole Distributors in India:
Geoffrey Manners & Co., Limited
BOMBAY, CALCUTTA, MADRAS and LAHORE

இந்தியாவுக்கு பூரண விநியோகஸ்தர்கள் :
ஜீயோப்ரே மானர்ஸ் & கம்பெனி லிமிடெட்
பம்பாய், கல்கத்தா, சென்னை, லாகூர்

சகல விதமான

சரும வியாதிகளுக்கும்

# Germex

A Little's Oriental Balm Product

உபயோகியுங்கள்

•

படை, எக்ஸிமா, கொப்புளங்கள், ரணங்கள், முகப்பரு, சிரங்கு, வெட்டுக் காயம், அடிபட்ட காயம் முதலியவைகளுக்கு சிறந்த ஔஷதம்.

•

ஜெர்மெக்ஸ் கிருமிகளைக் கொன்று காயங்களை ஆற்றுகிறது.




லிட்டில்ஸ் ஓரியண்டல் பாம் & பார்மசூடிகல்ஸ் லிமிடெட்,

11-12, முதல் லைன் பீச், சென்னை

---

# இந்தியாவினுடையது—

ஹிந்த் சைக்கிள்கள் பல வருஷங்களாக நாட்டிலுள்ள பலவகைப்பட்ட நிலைமைகளை — ரோடுகளின் விதங்கள், கனத்த மழை காலம், — இந்தியாவுக்கேற்ற சைக்கிள் உற்பத்தி செய்வதில் கவனிக்கப்பட வேண்டிய மற்ற அம்சங்களையும் — நன்கு ஆராய்ந்ததின் பலனாக இந்தியாவிலுள்ள மிகப்பெரிய சைக்கிள் தொழிற்சாலையில் உற்பத்தி செய்யப்படுகின்றன.



உற்பத்தி செய்பவர்கள் ஹிந்த் சைக்கிள் லிமிடெட்




சென்னை ராஜதானிக்கு (சமஸ்தானங்கள் உள்பட) விற்பனை உரிமையாளர்கள் :

டி லக்ஸ் டிரேடிங் கோ.,

பாலக்கரை, திருச்சிராப்பள்ளி.

பிராஞ்சு :

11, பிராட்வே, மதராஸ்.

எங்கும் கிடைக்கும்

